


அறிமுகப்படுத்துகிறோம்...

புதுமுறையில் உருவாகிய

# ஸன்லைட்

## அதிக ஒளிபெற வெளுக்கிறது.

* வடிவம் புதிது, மேலுறையும் புதிது * ஒளிதரும் ஆற்றலோ புதிது, புதிது —
சலவையிலே அதிக வெண்மை, அதிகஒளி

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

சோபகிருது. மார்கழி 14 | ○ டிசம்பர் 29



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




பட விளக்கம் 37ம் பக்கம் பார்க்க



மலர் 23 ❋ ❋ ❋ தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் ❋ ❋ ❋ இதழ் 22

# சோஷலிஸம் என்ற மாயை

இயற்கை விதிகளை எந்த யதேச்சாதிகாரியாலும் மாற்ற முடியாது. லாபம் இருந்தால் மட்டுமே மக்கள் ஒரு தொழிலில் ஊக்கத்துடன் ஈடுபடுவது இயற்கை விதிகளில் ஒன்று. இதை மாற்றுவது முடியாத காரியம். அப்படி மாற்ற முயலுபவர்கள்தான் கம்யூனிஸ்டுகளும் சோஷலிஸ்டுகளும். லாபம் பெறும் நோக்கத்தை அழித்து, அதிகார நிர்ப்பந்தத்தை அதனிடத்தில் நிறுவப் பார்ப்பது சிறிது காலத்துக்குத்தான் பலிக்கும். பிறகு பிசுபிசுத்துப் போகும். இயற்கையைத் துணை கொண்டு அது காட்டும் வழியில் நடக்க சோஷலிஸ்டுகளும், கம்யூனிஸ்டுகளும் கற்க வேண்டும்.

சுய லாபமும், பொது நலனும் முரண்படக்கூடுமல்லவா என்ற சந்தேகம் தோன்றலாம். இது நியாயமான சந்தேகம். அப்படி முரண்பட்டு ஒரு சிலரின் சுய லாப நோக்கம், பொது நலனைப் பாதிக்காதவாறு விவேகத்துடன் பரிபாலிப்பதுதான் அரசாங்கத்தின் கடமை. சுயலாபம் என்பதே தவறு என்றெண்ணி அதை அடியோடு புறக்கணிக்கப் பார்ப்பது உற்பத்தியை நசிக்கச் செய்வதேயாகும்.

வாசாலகமான மேடைப் பிரசங்கங்களைக் கேட்டுக் கேட்டு லாப நோக்கம் என்பதே அநாகரிகமானது என்ற எண்ணம் தோன்றி வருகிறது. லாபம் இல்லாமல் ஊக்கமில்லை; ஊக்கமில்லாமல் உற்பத்தியில்லை. பிறருடைய இன்னல்களின் மேல் ஒருவன் இன்பம் காண்பதா என்று சோஷலிஸ கோஷ்டி கானம் செய்வதால் பயனில்லை. பிறருக்கு இன்னல் செய்யாதவாறும், அதே சமயத்தில் ஒருவன் சுயலாப வாய்ப்பை இழக்காமலும் தொழில் புரியச் சர்க்கார் வசதி செய்து தரவேண்டும். ''மக்களின் நோவை விலை பண்ணி வைத்தியர்கள் பிழைப்பதா ? இது அநியாயமாச்சே ! கொண்டு வாருங்கள் எல்லா டாக்டர்களையும் மருந்துத் தயாரிப்பாளர்களையும், அரசாங்க மானேஜ்மெண்டிலேயே வைத்தியம் செய்வோம்'' என்கிற கதையாகத்தான் சோஷலிஸ பரிகாரங்கள் முடியும். தனி முதலாளிக்குப் பதில் சர்க்கார் என்ற பெரிய முதலாளியின் கொடுமை தொடங்கும். தனி முதலாளியின் ஊக்கத்தில் இப்போது நாம் காணும் உற்பத்தியைச் சம்பளம் வாங்கும் சர்க்கார் மானேஜர்களின் நிர்வாகத்தில் காண முடியாது. தனி முதலாளியின் அதிக்கிரமத்தைச் சர்க்கார் அடக்கித் தொழிலாளர் நலனைக் காப்பதுபோல் சர்க்காரே எஜமானனாகும் போது அதன் கொடூரத்தை அடக்க யாரும் இருக்க மாட்டார்கள். இந்த எளிய விஷயம் நமது புத்திசாலித் தொழிலாளர்களுக்குப் புரியாததுதான் அதிசயம். சமூகத்தில் நடக்கும் கொடுமைகளை எடுத்துக் காட்டுபவர்கள் அந்தக் கொடுமைகளை மட்டும் நீக்க முயலாமல் முழு அமைப்பையும் மாற்ற நினைக்கிறார்கள். கொடுமைகளை மிகைப்படுத்திக் காட்டி மக்களின் அருவை உணர்ச்சியைத் தூண்டி அதன்மீது தங்களுடைய கட்சிக்கு அநுதாபத்தைத் தேடிக் கொள்கிறார்கள். 'கொடுமையிலிருந்து இவர்கள் நம்மை விடுவிப்பார்கள்' என்ற நம்பிக்கையின் மீது மக்கள் தங்கள் சுதந்திரங்களையெல்லாம் அவர்களிடம் இழந்து அடிமையாகத் தயாராகி விடுகிறார்கள். ஆரம்ப காலத்தில் சோஷலிஸம் சுவர்க்கமாகத் தோன்றும். பிறகு பயமும், துன்பமும், பாராதீனமுமே நாட்டின் வாழ்வாகும்.

உழைப்பதன்றி மனிதனுக்கு வேறு வழியில்லை என்பது உபநிஷத மந்திரம். தான் உழைப்பின் பலனைப் பெற முடியும், லாபம் எடுக்க முடியும் என்ற நம்பிக்கையே

ஊக்கத்துக்குக் காரணம். முதலீட்டையும் உழைப்பையும் பொறுத்து நேர்மையான விகிதத்தில் லாபம் எதிர்பார்ப்பவர்களைத் திருடர்களாக எண்ணும் சோஷலிஸம் நாட்டின் வளங்கள் யாவற்றையும் சர்க்காரே கவர்ந்து, உற்பத்தியை அழிக்கும் பாதையில்தான் கொண்டு விடுகிறது.

தேசிய அடிப்படையில் புள்ளி விவரம் போட்டுப் பயனில்லை. தனி மனிதர்கள் ஒவ்வொருவரும் உற்சாகத்துடன் முதலீடு செய்து உழைப்பதன் கூட்டுத் தொகையான பலன்தான் தேசியப் புள்ளி விவரம். தனி மனிதனின் உழைப்பைச் சிதைத்துவிட்டால் புள்ளி விவரம் தானாக உண்டாகாது.

தனி மனிதனை உழைக்கச் செய்யும் இயற்கை விதி எது? லாபம் எடுக்கும் வாய்ப்பு ஒன்றுதான். ஒவ்வொரு மனிதனுக்கும் சுயலாப நோக்கத்தைப் பூர்த்தி செய்துகொள்ளும் சூழ்நிலையை உண்டாக்கி, ஒருவனுடைய லாப நோக்கம் மற்றவனது வாய்ப்பைப் பாதிக்காமல் யாவரும் நியாயமாகப் போட்டியிட வசதி செய்து தந்தால்—அப்படிச் செய்து தந்தால் மட்டுமே—உற்பத்தி பெருகும். உற்பத்தியான சரக்கு நியாயமான விலையில் மக்களுக்குக் கிடைக்கும். போட்டியில் விரயங்கள் ஏற்படுவதாகத் தோன்றும். உண்மையில் விரயம் ஏதுமில்லை. நல்ல பண்டம் கிடைக்க வேண்டும், நியாயமான விலைக்குக் கிடைக்க வேண்டும் என்றால் போட்டியைத் தவிர்ப்பதற்கில்லை. மோசடியும் சுரண்டலும் நடைபெறாமல் சர்க்கார் இந்தச் சுதந்திரத் தொழில்முறையைக் கண்காணித்தால் நாடு சுபிட்சமடையும்.

ஒவ்வொருவரும் தத்தம் விருப்பப்படி தொழில்பட அநுமதித்தால் ஒரே குழப்பமாகிவிடாதா என்று தோன்றும். சுதந்திரம் எப்போதுமே குழப்பமாகத்தான் தோன்றும். என்றாலும் உத்தியோகஸ்தர்களின் அதிகாரம் பெருகிக் கொண்டு போய் உற்பத்தியை நெருக்குவதை விட இந்தச் சுதந்திர முறை எவ்வளவோ சிலாக்கியமானது. சுயலாப வாய்ப்பு என்கிற என்ஜினுடைய வேகத்தில் மற்றத் தடைகளையெல்லாம் கடந்து பொருளாதார வண்டி சுபிட்சப் பாதையில் முன்னேறும்.

உற்பத்தியைப் பெருக்க சோஷலிஸத்தில் எதுவுமே கிடையாது. உற்பத்தியான பொருள் சமமாக விநியோகமாவதுதான் அதன் குறிக்கோள். உற்பத்தியைப் பெருக்க வேண்டியதே முதல் தேவையாக உள்ள நம் நாட்டில் விநியோக சம சித்தாந்தத்துக்கு இப்போது இடமில்லை. ஏற்கனவே உற்பத்தி பெருகியிருந்த நாடுகளில் சோஷலிஸம்



அமுலான பின் அவை க்ஷீணதசை அடைந்து வருவதையும் கண்கூடாகப் பார்த்து வருகிறோம். புகழும், பாராட்டும் சில கலைஞர்கள், ஆராய்ச்சியாளர்கள் ஆகியோரை மட்டுமே ஊக்கும். அலுத்துச் சலித்துப் பாடுபடும் சாமானிய மானுடர்களின் ஊக்கம் சுய முன்னேற்றத்தைத்தான் ஜீவாதாரமாகக் கொண்டது. சுயநலனை மறந்து தேசத்துக்கு உழைக்க வேண்டும் என்கிற நிலைமையை ராணுவ முறைப்படி கட்டாய அமுல் செய்ய நினைத்தாலும், அத்தகைய கட்டாய முறை சிறு நாடுகளில்தான் செல்லுபடியாகும். நாற்பத்துநாலு கோடி மக்கள் கொண்ட நாட்டில் பலிக்காது. நேர்மையான சோஷலிஸ வாதிகளே ஆட்சிக்கு வருவதாக ஒப்புக்கொண்டாலும்கூட அவர்களால் உற்பத்தியானதை விநியோகம் செய்யத்தான் முடியுமே தவிர உற்பத்தி செய்ய முடியாது. நம் நாட்டில் சோஷலிஸத்தைப் புகுத்திப் பொன் முட்டையிடும் தாய் வாத்தையே கொல்லப் பார்க்கிறார்கள்.

தனியாருடைய உற்பத்தியிலும் வியாபாரத்திலும் லாபத்தைப் போல் நஷ்டமும் உண்டு. நஷ்டம் ஏற்படக்கூடும்என்ற பயமுள்ள போதுதான் திறமையோடு உழைக்கவும், தவறுகளைத் திருத்திக் கொள்ளவும் அவசியம் ஏற்படுகிறது. அப்படியே தனி முதலாளி நஷ்டமடைந்தாலும் அது அவன் ஒருவனின் நஷ்டம் தான். சர்க்கார் தொழில் செய்து அடைகிற நஷ்டமோ வரி கொடுக்கும் சகல மக்களின் நஷ்டமுமாகும். சமூகத்தைக் குறிக்கும் 'சொஸைட்டி' என்ற சொல்லோடு தொடர்பு கொண்டது சோஷலிஸம் என்ற மாய வார்த்தை. ஆனால் நிர்வாகப் பொறுப்பு சமூகத்திடம் இல்லை. ஆட்சி புரியும் கட்சியிடமே உள்ளது. இருந்தாலும் நஷ்டம் அவ்வளவும் சமூகத்தின்மீதே வரி என்ற பெயரில் விழுகிறது. தனிமனிதன் சமூக நலனைக் கருதி ஆற்ற வேண்டிய ஒப்புரவு ஒழுக்கங்களைக்கூறும் அற நெறிகளோ, சமய உணர்வோ, நாகரிகமோ, மக்கள் கருத்தோ எதுவுமே சோஷலிஸத்தில் இடம் பெறவில்லை. தாங்களாகவே கட்டுப்பட்டு தர்ம நியாயமாக நடக்கும் போதுதான் மக்கள் சுதந்திர உணர்வைப் பெற்றிருப்பார்கள். காங்கிரஸ் சர்க்காரின் சோஷலிஸம் காந்திஜியின் சித்தாந்தத்துக்கு நேர் எதிர் துருவம் எனலாம். கட்சிக்காரர்களின் துராசைகள், அதிகாரிகளின் ஒழுங்கீனங்கள் இவையே சோஷலிஸம் என்ற பெயரில் இந்தியாவில் நடக்கும் சர்க்கார் சர்வாதிபத்தியத்தின் போக்கு. இதனால் சமூகத்துக்கு எந்த நலனும் விளையாது. ஆளும் கட்சிக்காரர்கள் மட்டும்தான் நலமடைவார்கள். சோஷலிஸம் என்பது ஓர் ஏமாற்றும் திருநாமம்.

# இரண்டு மன்னர்கள்

**பு**ராதன காலத்திலிருந்து இசையாறு பாய்ந்து வரும் ஐயாற்றிலே இவ்வாண்டு சத்குரு ஸ்ரீ தியாகராஜ ஆராதனைத் திருவிழாவுக்கு முதல் நாள், அதாவது 2 - 1 - 1964 அன்று மற்றொரு பெரு விழா நிகழ்கிறது. தியாகைய ஸ்வாமிகளின் சிஷ்ய பரம்பரையிலேயே வந்துள்ள சங்கீத பூபதி மகாராஜபுரம் ஸ்ரீ விசுவநாதய்யர் அவர்களுக்கும், ஸ்வாமிகள் தந்த மரபைப் பிறழாது பின்பற்றும் வயலின் வித்வான் சங்கீத கலாநிதி கும்பகோணம் ராஜமாணிக்கம் அவர்களுக்கும் திருவையாற்றிலே பாராட்டு விழா நடைபெறுகிறது.

மகாராஜபுரம், ராஜமாணிக்கம் என்ற பெயர்களே குறிப்பது போல் இவ்விருவரும் தத்தம் துறையில் மன்னர்களாக விளங்கியவர்கள். பொதுமேடையில் இன்று அதிகம் இடம் பெறாவிடினும், எத்தனையோ ரசிகர்களின் மனமேடையில் இன்றும் இவ்விருவரும் இசையரசர்களாக வீற்றிருக்கிறார்கள். நளினம், மிடுக்கு இரண்டுக்கும் இலக்கணமாக விளங்கும் விசுவநாதய்யரின் இசையில் வேறெங்கும் காண முடியாத விச்ராந்தியையும் காணமுடியும்; விறுவிறுப்பையும் காண முடியும். ராகினி தேவதைகள் தங்களது பூரண ஸ்வரூபத்தையும் நூதனமான கோலங்களில் இவர்மூலம் விளங்கிக் கொண்டது போல் வேறெந்த வித்வானிடமும் பிரகாசமடையவில்லை என்றே துணிந்து கூறலாம். தமது மனோரஞ்சிதமான சாரீரத்தாலும், மனோகரமான பாணியாலும் மக்களைப் போதை கொண்டு சொக்க வைத்த மன்னர் அவர். பாலகந்தர்வா என்ற ஹிந்துஸ்தானி வித்வானிடம் ஈடுபாடு கொண்ட மகாராஜபுரம் அய்யரவர்கள் இன்று விருத்த கந்தர்வராக விளங்குகிறார். இன்று போல் அவர் என்றும் உல்லாசமும் உற்சாகமுமாக வாழப் பிரார்த்திக்கிறோம்.

கும்பகோணம் ராஜமாணிக்கம்பிள்ளை அவர்கள் உருவத்தில் எப்படிப் பெரிய வரோ அப்படியே பண்ணிலும், பண் பிலும் பெரியவர். வயலின் தந்திகளை இழைக்கும்போது ராகங்களின் உயிர் நாடிகளையே இழைத்து அற்புத இசையை அளிப்பார். வயலின் வில்லின் மூலம் மத்திமகால ஸ்வரங்களைச் 'சரமாரி' யாகவே பொழிபவர் அவர். பக்க வாத்தியம் வாசிக்கும் போது தமது அபாரத் திறமைகளைக் கட்டுப்படுத்திக் கொண்டு, பாடும் வித்வானின் கானத்தைப் பரிமளிக்கச் செய்யும் பரந்த உள்ளத்தினர் அவர். மக்களின் ஏகோபித்த அன்பின் பலத்தில் அவர் பல்லாண்டு பண் வளர்த்து வர வேண்டுமென வாழ்த்துகிறோம்.

ஒரு பொன்விழாக் காலமாகக் கலைத் தொண்டு செய்யும் இவ்விரு நாதவித்தகர்களையும் இவ்விதழ் அட்டையில் வெளியிட்டு அதன் மூலம் நமது வணக்கங்களை அவர்களுக்கு அளிக்கிறோம்.

# என்ன சேதி?

## எது தேசபக்தி?

பிரதமரும், நிதிமந்திரியும் வெளி நாடுகளிலிருந்து கடன் வாங்கும்போது தங்கள் சொந்தப் பொறுப்பில் வாங்குவதில்லை. நாற்பது கோடி மக்களின் சார்பில் வாங்குகிறார்கள். பத்து வருஷம், அல்லது இருபது வருஷ காலத்தில் தவணைகளாகத் திருப்பிக் கொடுப்பதாக வாங்கும்போது இன்றைய காங்கிரஸ் சர்க்கார் மட்டும் அதற்குப் பொறுப்பில்லை. வருங்கால சர்க்கார்கள் — எந்தக் கட்சி ஆட்சியிலிருந்தாலும்- திருப்பிக் கொடுக்கக் கடமைப்பட்டவர்களாகிறார்கள். ஆகவே எதிர்க்கட்சியினர் இந்தியாவின் திருப்பிக் கொடுக்கும் சக்தியை நினைவில் வைத்துக் கொண்டு கடன் வாங்க வேண்டும் என்றும், வெளிநாடுகளில் நமது திருப்பிக் கொடுக்கும் சக்தியைப் பற்றிச் சந்தேகப் படத் தொடங்கியிருக்கிறார்கள் என்றும் கூறும் போது, அது தக்க சமயத்தில் செய்த எச்சரிக்கை, தேச பக்தியினால் உந்தப்பட்டுச் செய்த எச்சரிக்கை என்று ஆளும் கட்சியினர் ஏற்றுக் கொள்ள வேண்டும். காந்தி மகானுடன் துணை நின்று சிறை சென்று, பல தேசப் பணிகளில் ஈடுபட்டு வந்த திரு மஸானி இப்படிப் பேசியதைப் பார்த்துக் குறை கூறுகிறார் டி. டி. கே. அவர் தேசபக்தி பற்றிப் பேசும்போது சிரிப்பு வருகிறது. பார்லிமெண்ட் சபையில் டி.டி.கே.யின் பேச்சுக்குக் கட்சியின் ஆதரவு பெற்று விடலாம். ஆனால் வெளியே தேச மக்கள், மஸானி தக்க சமயத்தில் எச்சரிக்கை செய்ததற்கு நன்றியே தெரிவிக்கிறார்கள்.

## ஏழைமையும் ஈகையும்

சென்னை மேற்கு மாம்பலத்தில் ''பொது ஜன சுகாதார விடுதி'' என்ற பெயரில் திறமையும் புகழும் பெற்ற சில டாக்டர்களின் கைம்மாறு கருதா உதவி கொண்டு, சில இளைஞர்கள் ஸ்ரீ எம். வி. சுப்பிரமணியம் அவர்கள் தலைமையில் மிக நல்ல முறையில் பொது ஜனத் தொண்டு செய்து வருகிறார்கள். பத்து ஆண்டுகளுக்கு முன்பு இந்தத் திருப்பணி சிந்தனை அளவிலிருந்தபோது ஊக்கமும் உற்சாகமும் ஊட்டியவர் பேராசிரியர் கல்கி. ஆசி வழங்கியவர் அன்று சென்னை முதன் மந்திரியாக இருந்த ராஜாஜி. இந்தப் பத்து ஆண்டுகளில் இப்பணி பொதுமக்களின் பேராதரவுடன் வளர்ந்துள்ளது. இவர்கள் சென்ற ஞாயிற்றுக் கிழமை திரு காமராஜ் தலைமையில் பத்தாண்டு நிறைவு விழா சிறப்பாகக் கொண்டாடினர். கல்கியின் உருவப் படத்தை ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன் திறந்து வைத்து அரிய சொற்பொழிவாற்றினார். திரு ஏ. ஜி. வேங்கடாச்சாரி கல்கியிடம் எழுத்துத் திறமையோடு செயல் திறமையும் சேர்ந்திருந்ததை நினைவுபடுத்தினார். கடைசியாகப் பேசிய ஏ. லட்சுமண சுவாமி முதலியாரவர்கள், இந்த வைத்திய சேவையை உள்ளார்ந்த மகிழ்ச்சியோடு பாராட்டிப் பேசிய போது தமது நீண்ட வாழ்வில், தேசத்தின் பல பகுதிகளிலும், வெளிநாடுகளிலும் பன்முறை சுற்றி வந்ததன் பயனாக நமது சிறப்பு ஏழைமைதான் என்று தாம் கண்டுகொண்டதாக விளக்கினார். 'சென்ற பத்து ஆண்டுகளில் கல்விக்காகவும் வைத்தியத்துக்காகவும் ஏழைத் தமிழ் நாட்டில் பொதுமக்கள் வழங்கியுள்ள அளவு பாரதத்தில் எந்தப் பகுதியிலும் வழங்கப்படவில்லை. இதற்குக் காரணமே பாரதத்தின் மற்றப் பகுதிகளைவிட தமிழகம் ஏழையாக இருப்பதுதான். செல்வம் பெருகியுள்ள நாடுகளில் மனிதப் பண்பு குறைந்திருப்பதைப் பார்க்கிறோம். ஏழையின் உள்ளம் இரங்குமளவு பணக்காரனின் உள்ளம் இரங்குவதில்லை' என்று கூறினார். இது நம் சிந்தனைக்குரிய விஷயம்.

# கெட்ட எண்ணம் இல்லாமல் குற்றம் உண்டா?

ராஜாஜி

தேச கௌரவத்தை அவமதிப்பதைத் தடுப்பதற்கு 1957ல் சென்னை ராஜ்யம் ஒரு சட்டம் போட்டது. இதன் கீழ்தான் திரு அண்ணாதுரை அவர்கள் மீது குற்றம் சாட்டப்பட்டு, சிறைவாசத் தீர்ப்பு வெளியாகியிருக்கிறது. அரசியல் சாஸனத்தை அவமதிக்கும் நோக்கத்துடன் செய்த காரியம் என்று நிரூபணம் செய்யாமலே தண்டனை தருவேன் என்று நீதிபதி தீர்ப்பு செய்திருக்கிறார்.

தி. மு. க.வின் எரிப்புத் திட்டத்தை நான் ஒப்புக் கொள்ளாதது எல்லாரும் அறிவார்கள். ஆனால் இப்போது ஆராய்ச்சிக்குரிய விஷயம் அதுவல்ல. நல்ல திட்டமா, உசிதமா என்பது விஷயமல்ல. அவமதிப்பு செய்ததற்காக மட்டுமே தண்டனையைக் கூறுகிற ஒரு சட்டத்தின் கீழ் அவ்வித நோக்கம் இல்லாதவர் மீது குற்றம் சுமத்தி, தண்டனை விதிக்கலாமா என்பதே கேள்வி. அவமதிக்க வேண்டும் என்ற ஒரே திடமான நோக்கத்துடன்—'Wilful' ஆக—நடக்கிற செயலைத் தண்டிக்கத்தான் 1957ம் ஆண்டுச் சட்டம் இடம் தருகிறது. திரு அண்ணாதுரை அவர்களின் நோக்கம் அரசியல் சாஸனத்தை அவமதிப்பது அல்ல. அதிலுள்ள ஆட்சிமொழி ஷரத்தைத் தாம் ஆட்சேபிப்பதையும் அந்த ஷரத்துத் திருத்தப்படவேண்டும் என்று தாம் விரும்புவதையும் நாடு அறிய வேண்டும் என்பது தான் அவரது நோக்கம். நாட்டின் கவனத்தைக் கவருவதற்கு ஓர் உபாயமாகவே அவர் சாஸனத்தின் குறிப்பிட்ட பகுதியை எரிக்கத் திட்டம் வகுத்தார். இது அரசியல் சாஸனத்தையாவது நாட்டையாவது அவமதிக்கிற நோக்கத்தில் சேராது.

அரசியல் சாஸனத்துப் பிரதிகளில் ஒன்றின் ஒரு பகுதியை எரிப்பதைவிட சாஸனத்தையே ஆட்சியாளர்கள் அடியோடு மாற்றுவது சாஸனத்துக்கு இழைக்கப்படும் பெரிய அவமரியாதையாகும். வேறு நோக்கத்தோடு சாஸனத்தில் ஒரு பிரதியை எரிப்பதே 'அவமதிப்பு' என்கிற அளவுக்கு அதனைத் தெய்வீக லிங்கமாகக் கொண்டால் அதன் உயிரான ஜீவாதார ஷரத்துக்களை மாற்றுவது அதைவிடப் பெரிய அவமதிப்புக் குற்றமாகாதா? பார்லிமெண்டின் மெஜாரிட்டி பலத்தால் இஷ்டப்படி மாற்றப்படும் சாஸனத்தை ஒரு தெய்வீக லிங்கமாகக் கருதுவதில் சாரம் இல்லை.

முக்கியமாக, சாஸனத்தை அவமதிக்கும் நோக்கத்தோடு வகுக்கப்படாத தி. மு. க.வின் திட்டத்தைக் குற்றமாகக் கருதுவது பொருளற்றதாகும். பல ஆண்டுகளுக்கு முன்னால் நான் ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்து, கதர் இயக்கத்தில் ஈடுபட்டிருந்த சமயத்தில் ஒரு வழக்கு விசாரணைக்கு வந்தது. திருப்பதி மலையடியிலுள்ள திருச்சானூரில் தாயார் கோயிலில் பிரவேசித்ததற்காக ஹரிஜன் ஒருவர் மீது வழக்குத் தொடரப்பட்டது. அந்த நாள் குற்றச் சட்டப்படி, ஜஸ்டிஸ் முத்துஸ்வாமி ஐயரவர்களின் தீர்ப்பு ஒன்றை ஆதாரமாகக் கொண்டு ஹரிஜன் ஒருவர் கோயிலில் பிரவேசிப்பது அதன் புனிதத்தைக் குலைக்கும் குற்றமாகக் கருதப்பட்டது. இதன்படிதான் அந்த ஹரிஜன் மீது வழக்குப் போடப்பட்டிருந்தது. ஒத்துழையாமை இயக்கத்தின் கீழ் தொழிலை விட்ட போதிலும் இந்த வழக்கில் அவரது சார்பில் வாதாடுவதற்கு நான் பிரத்தியேக அநுமதி கோரி விண்ணப்பித்தேன். அநுமதி அளிக்கப்பட்டது. முன்னொரு சமயம் சென்னை ராஜ்ய முதன் மந்திரியாயிருந்த திரு முனுசாமிப்பிள்ளை அவர்கள் பிரதிவாதிக்காக ஆஜராகியிருந்தார். பிரபல கணித விற்பன்னரான ஸ்ரீமான் வி. ராமஸ்வாமி அய்யரவர்கள்தான் வழக்கை விசாரித்த மாஜிஸ்திரேட்.

நான் இப்படி வாதிட்டேன்: 'பிரதிவாதி ஆலயத்தில் பிரவேசித்த அன்று உற்சவ தினமாகும். நூற்றுக்கணக்கான மக்கள் அன்றைக்குப் பரவச பக்தியில் கோயிலுக்குச் சென்றார்கள். பிரதிவாதியும் அவர்களைப் போலவே முழுகி, திருமண் இட்டுக் கொண்டு ஆவேச நிலையில், 'கோவிந்தா, கோவிந்தா' என்று கூவியபடி கூட்டத்தோடு கூட்டமாகக் கோயிலில் பிரவேசித்து விட்டார். ஆனபடியால் கோயிலின் புனிதத்தைக் குலைக்க வேண்டும் என்பது அவரது நோக்கம் அல்லவே அல்ல. வழிபட வேண்டும் என்றே ஆலயத்தில் பிரவேசித்தார். ஸிவில் சட்டப்படி அவரது செயலை அத்துமீறிய பிரவேசம் என்று கொண்டாலும், குறிப்பிட்ட குற்றப் பிரிவின் படி அவரைத் தண்டிக்க முடியாது.' மாஜிஸ்திரேட் என் வாதத்தை ஏற்றுக்




கொண்டு, பிரதிவாதியை விடுதலை செய்து விட்டார். மாஜிஸ்திரேட்டின் தீர்ப்புக்கு மேலாகச் சர்க்கார் அப்பீல் போடவில்லை.

அதே நியாயப்படி, கெட்ட எண்ணம் என்கிற முக்கியமான அம்சம் இருந்ததா இல்லையா என்று பார்த்தால் திரு அண்ணாதுரை அவர்களின் எரிப்பு உத்தேசம் குற்றத்தில் சேராது. நோக்கத்தை முன்விட்டுத்தான் செயலை நிர்ணயிக்க வேண்டும் என்ற விதிப்படி, திரு அண்ணாதுரை இப்போதுள்ள சட்டத்தின் கீழ் குற்றவாளி அல்ல என்றே கருதுகிறேன்.

அவ்வாறெனில், எரிப்புத் திட்டங்களைச் சர்க்கார் தடுக்க விரும்பினால் எப்படித் தடுப்பது என்கிற கேள்வி எழலாம். இதற்கு விடை மிகவும் எளியது: சாஸனத்தை எந்தக் காரணத்துக்கும் எரிக்க முற்படக் கூடாது என்று ஓர் உத்தரவு பிறப்பித்து விடலாம். கலகாஸ்பதமான முறையில் உத்தரவை மீறியதற்குத் தண்டிக்கலாம். தி. மு. க. வின் திட்டத்தில் சாஸன அவமதிப்பும், அமைதிக்குப் பங்கமும் இருப்பதாகக் கருதிக் குற்றம் சாட்டியது தவறு என்கிறேன். இந்த வாதம் சட்டப்படி செல்லாது எனில் அந்தச் சட்டம் அடிப்படை நீதித் தத்துவங்களுக்கு முரணானது. அதை நீதிக்குப் பொருந்திய வகையில் திருத்தியாக வேண்டும். குற்றம் செய்யும் நோக்கமில்லாமல் செய்யப்படும் காரியங்களைக் குற்றம் என அரசாங்கம் கருதுவது நாகரிகமல்ல. அமைதிக்குப் பங்கம் விளைவிக்காத முறையில் எதிர்ப்புக் கூட்டங்களை ஒழுங்கு செய்ய வேண்டுமேயன்றிக் குற்றச் சட்டத்தின் கீழ் கொண்டு வருவது தகாது.

கடைசியாக ஒரு வார்த்தை: வடக்கும் தெற்கும் பரஸ்பர நல்லெண்ணத்தோடும் இதய பூர்வமான ஒற்றுமையோடும் வாழ வேண்டும் என்று ஆட்சித் தலைவர்கள் விரும்புகிறார்களா? அல்லது, ஹிந்தி மொழி மத்திய சர்க்காரில் இப்போதிலிருந்தே ஆட்சி மொழியாக வேண்டும் என்பதைத் தேச ஐக்கியத்தை விடப் பெரிதாக நினைக்கிறார்களா? தேச ஐக்கியம்தான் முக்கியம் என்பதை யாரும் ஒப்புக் கொள்வார்கள். இந்த சத்தியமான கருத்துக்கு விரோதமாகத்தான் இன்று ஆட்சி மொழிக் கொள்கையும், குற்றச்சாட்டுக் கொள்கையும் செல்கின்றன.




**38**

பேயாழ்வார் தம்முடைய உள்ளத்தில் பகவான் அருள் கொண்டு வந்து நிலைத்து விட்டான் என்பதைப் பாடுகிறார். இனி அவனைக் காண்பது அரிது. அவன் மாயவன். அவனுடைய லீலைகளைப் புரிந்து கொள்வது முடியாத காரியம் என்றெல்லாம் கவலைப்பட வேண்டியதில்லை என்று களிப்புடன் பாடுகிறார்.

**இனியவன் உள்ளத்தின்**
**உள்ளே உளன் !**

இனி ஐயமொன்றும் இல்லை. அவன் என் உள்ளத்தில் இருக்கிறான், உணர்ந்துவிட்டேன் என்று மகிழ்ச்சி அடைகிறார்.

**இனிஅவன் மாயன்**
**எனஉரைப்ப ரேனும்**

*[இனி அவன் மாயன் என - இனிமேல் யாரேனும் அவன் மாயம் செய்கிறவன், அவனுடைய மாயத்தை யாரும் புரிந்துகொள்ள இயலாது என்று பயமுறுத்தினார்களானாலும்.]*

**இனிஅவன் காண்பரிய**
**னேனும்**

*[இனி அவன் காண்பரியனேனும்-பகவானை யாராலும் காண முடியாது. பகவானுடைய ஸ்வரூபத்தை நேரில் கண்டு அனுபவிக்க முடியாது என்று வாதிப்பது உண்மையாயினும் எனக்குக் கவலையில்லை.]*

**கள்ளத்தால் மண்கொண்டு**
**விண்கடந்த பைங்கழலான்**

*[கள்ளத்தால் மண்கொண்டு - வாமன விக்கிரம அவதாரங்கள் எடுத்து மாபலியிடம் தானம் பெற்று, விண்கடந்த பைங்கழலான் - உலகத்தை அளந்த திருமால்.]*

**இனியவன்**
**உள்ளத்தின் உள்ளே**
**உளன்**

அவன் இதயத்தினுள்ளே வாசம் செய்கிறான், இதை உணர்ந்து விட்டேன்.

பக்தியினுடைய பூரணப் பயனை அடைந்த மகிழ்ச்சியை ஆழ்வார் இவ்வாறு பாடுகிறார். பக்தி ஒன்றே பகவானை அடையும் வழி. பகவானுடைய ஸ்வரூபத்தை ஆராய்ச்சி செய்து அறிவினால் அடையவும் முடியாது. அப்படி அடைய முடியும் என்று வைத்துக் கொண்டாலும் அதில் பயனில்லை. அவனை நம்முடைய உள்ளத்தில் அமையச் செய்வது அல்லவோ நம் நோக்கம். அதற்கு வழி பக்தி செலுத்துவதே. மற்ற மார்க்கங்கள் உதவா.

**இனியவன் மாயனென**
**உரைப்ப ரேனும்**
**இனியவன் காண்பரிய**
**னேனும் — இனியவன்**
**கள்ளத்தால் மண்கொண்டு**
**விண்கடந்த பைங்கழலான்**
**உள்ளத்தின் உள்ளே**
**உளன் !**

# இசைக்கு இருவர்

## செம்மங்குடி ஸ்ரீநிவாஸ அய்யர்



நமது தென் தேசத்தில் சென்ற ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக ஒப்புயர்வற்ற இசை மேதைகளாகக் கர்நாடக சங்கீதத்தைப் பரப்பி இசைக் கலைஞர்களையும், ரசிகர் குழாத்தையும் பெருக்கித் தொண்டாற்றிய இருவரை இன்று இசை உலகு கௌரவிக்கிறது. ஒருவர் மகா வித்வானும், எனது குருநாதருமான சங்கீத கலாநிதி மகாராஜபுரம் ஸ்ரீ விசுவநாதய்யர் அவர்கள். மற்றவர் சங்கீத கலாநிதி வயலின் ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை அவர்கள். இச்சமயத்தில் இவ்விருவரின் பெருமைகளையும் கூற நான் ரொம்பவும் பெருமைப் படுகிறேன்.

ஸ்ரீ மகாராஜபுரம் அய்யர் அவர்கள் ஸத்குரு ஸ்ரீ தியாகப் பிரம்மத்தின் நேர் சிஷ்ய பரம்பரையில் வந்தவர். தியாகராஜ ஸ்வாமிகளின் சிடர்கள் உமையாள்புரம் சகோதரர்களான ஸ்ரீ கிருஷ்ண பாகவதர், ஸ்ரீ சுந்தர பாகவதர் இவர்களாவர். அவர்களது சிஷ்யர்கள் நாதாநுபவ ஸாரக்ஞ ஸ்ரீ உமையாள்புரம் ஸ்வாமிநாதய்யர் முதலானோர். அதோடு ஸ்ரீ மகா வைத்தியநாத அய்யரவர்களது சிஷ்யராகவும் விளங்கியவர் ஸ்ரீ உமையாள் புரம் ஸ்வாமிநாதய்யர். அவரிடம்தான் நமது மகாராஜபுரம் அய்யரவர்கள் குருகுலவாசம் செய்தார்கள்.

உமையாள்புரம் சுவாமிநாதய்யர் அவர்களிடம் குருகுலவாசம் முடித்த பின்பு பழனி ஸ்ரீ ரங்கப்பய்யர் என்னும் வித்வானிடம் ஸ்ரீ விசுவநாதய்யர் குருகுலவாசம் செய்து லய சம்பந்தமான நுட்பங்களைத் தெரிந்து கொண்டார். பதினாறுவது வயதிலேயே மேடைக் கச்சேரிகள் செய்து புகழும் அடைந்து விட்டார்.

ஸ்ரீ பூச்சி ஸ்ரீநிவாசய்யங்கார், பாலக்காடு ஸ்ரீ அனந்தராம பாகவதர், ஸ்ரீ கோனேரி ராஜபுரம் வைத்தியநாதய்யர், மதுரை ஸ்ரீ புஷ்பவனம் அய்யர் முதலான மகாவித்துவான்கள் மிகவும் பிரபலமாக விளங்கிய காலத்திலேயே இளைஞரான ஸ்ரீ அய்யரவர்களுக்கு நல்ல பெயரும் புகழும் கிட்டின. இது அசாதாரணமான திறமையையே காட்டுகிறது. 'ஜீனியஸ்' எனப்படும் தெய்விகமான அருள் உள்ளவர் அவர் என்பதற்கு அவரது இந்த வாலிபப் புகழே சான்றாகும். தமது விசேஷமான சங்கீத ஞானத்தை வழங்குவதற்கு வாய்ப்பான திவ்விய சாரீரமும் பெற்றிருந்ததுதான் அய்யரவர்களது வெற்றிக்குக் காரணம்.

இப்போது ஸ்ரீ அய்யரவர்களுக்கு அறுபத்தி ஏழாவது வயது முடிந்து விட்டது. இன்று அவரது சங்கீதம் பக்தியும் மிகுதியாகச் சேர்ந்து பரிசுத்தமாக விளங்குகிறது. சாரீரத்தில் தான் என்ன சுருதி சுத்தம்? எத்தகைய ஸ்வர சுத்தம்? எப்படிப்பட்ட காலபிரமாண சுத்தம்? பாரபட்சமில்லாமல், பாமர பண்டிதர்கள் யாவரையும் வியக்கச் செய்யும் தெய்விகமான சங்கீதம் ஸ்ரீ அய்யர் அவர்களுடையது.

ஸ்ரீ அய்யரவர்களுக்கு ஹிந்துஸ்தானி சங்கீதத்தில் விசேஷமான பிரமையே உண்டு. ஆனதால் அந்தப் பாணியையும் கர்நாடக சங்கீதத்தின் தன்மையை மாற்றாத அளவில் சேர்த்து, நல்ல மேல் காலத்தில் அவர் பாடும்போது கேட்போர் ஆனந்த வெள்ளத்தில் அமிழ்ந்து ஆடுவார்கள். அந்த மேல் காலப் பிர்க்காக்கள் எல்லாம் ஒரு ஸ்வர ஸ்தானம் கூட நழுவலோ கூடுதலோ இல்லாமல், அளவோடு உட்டாணி சிமைக் கமலம்போல் அதனதன் ஸ்தானத்தில் ஒளியுடன் பிரகாசிக்கும். இதை ரசிக்கத் தெரிந்தவர்களுக்கு இவர் ஒரு தெய்வ சக்தி பொருந்திய வித்வான் என்பதில் மாறுபட்ட அபிப்பிராயமே இருக்க முடியாது.

ஸ்ரீ அய்யரவர்கள் பிறருக்காகப் பாடுபவரில்லை. தமக்காகவே தம்மை மறந்து பாடும் ஒரு கலைஞராவார். எடுத்த எடுப்பிலேயே ராகங்களின் பூரண ஸ்வரூபத்தைக் காட்டிப் பிறகு பலவிதமாக அலங்கார ஜோடனைகள் செய்து கல்பனா லோகத்தில் நம்மைத் திளைக்க வைக்கும்—ஏன், திகைக்கவும் வைக்கும்—அபூர்வ சக்தி பெற்றவரவர்.

வித்வான்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். அதாவது ஒரு கச்சிதமான முறையில் ராகம், கீர்த்தனம், ஸ்வரம் பாடுவது; ஓர் அளவோடு நிறுத்தி, அதைக் கேட்போருக்கும் கேட்கச் சமயம் கொடுத்துப் பாடுவது ஒரு வகை. இந்த வகைக் கலைஞரின் கச்சேரியில் நிச்சயமாகச் சில அம்சங்களை எதிர்



மகாராஜபுரம் மணிவிழாவில் - கட்டுரையாசிரியர் ஸ்ரீ செம்மங்குடியை உடன் காணலாம்.

பார்த்து அவற்றைப் பெருகிற திருப்தியை ரஸிகர்கள் காண்பார்கள்.

ஆனால் தன்னை மறந்து, கற்பனை உலகில் சஞ்சாரம் செய்து, பிறருக்காகப் பாடாமல் தனக்காகவே பாடிக்கொள்ளும் வித்வானின் இசையில் சில சமயம் ரஸிகர்களுக்கு ஏமாற்றம் ஏற்படுவது உண்டு. ஆனால் வாய்ப்பாக அமைந்து விட்டாலோ அந்தச் சங்கீதம் நம்மை உலுக்கிவிடும். நமது நினைவிலிருந்து என்றும் அகலாது. இது தெய்விகமான சங்கீதம். இந்த வகையைச் சேர்ந்ததுதான் நமது அய்யரவர்களின் இசை. ஸ்ரீ அய்யரவர்கள் மெய் மறந்து நல்ல உற்சாகத்தோடு கச்சேரிகளில் பாடும்போது கேட்போர் தம்மை மறந்து ஆஹாகாரம் செய்வார்கள். மின்னல் போல், மின்சாரம் பாய்வதுபோல் நமது இதயத்தில் இந்த இசை பாயும்.

காலஞ்சென்ற மகாவித்வான் டைகர் வரதாச்சாரியார் அவர்கள் சொன்ன வார்த்தைகளை இங்கு நினைவுகூருகிறேன். ''மகாராஜபுரத்தின் பாட்டு எலக்ட்ரிக் கரண்டு. திருப்பிப் பிடிக்க முடியாத அசாத்தியமான பாட்டு. ஜாதி, மதம், பந்து, ஊர், தேசம் இம்மாதிரியான எந்த அபிமானமும் தாட்சிண்யமுமின்றி கேட்டு ஆனந்திக்கும் தன்மையுள்ள ஸ்வச்சமான தெய்விக சங்கீதம் இது'' என்று அப்பெரியார் வாய்விட்டு இதய பூர்வமாகச் சொல்லி மகிழ்ந்தார்.

ஸ்ரீ அய்யரவர்கள் பாடும் ராகங்களில் முக்கியமான ரக்தி ராகங்கள் நம் கண் முன் என்றுமே நிற்கின்றன. அவருடைய அடாணா, தர்பார், நாயகி, ஆரபி, தேவகாந்தாரி, ஸஹானா, கானடா, கமாஸ், பிலஹரி, ஸாவேரி, தன்யாசி, நாட்டக்குரஞ்சி, மோகனம், முகாரி, ஹம்ஸானந்தி முதலான ராகங்களும் மற்றும் கனராகங்களும் என்றும் நம் காதுகளில் ரீங்காரம் செய்துகொண்டு இருக்கும்.

இன்றும் ஆனந்தமாகத் தாமே உருகிப் பாடுகிறார். மிகுந்த அறிவாளிகளும் இசை விற்பன்னர்களும் ரசிக்கும்நிலையிலுள்ள உயர்ந்த சங்கீதமாக இன்று அவரதுகானம்விளங்குகிறது.

இருபத்தி ஐந்து வருஷங்களுக்கு முன் திருவையாற்றில் நடந்த ஒரு சம்பவத்தை — இன்றும் என் கண்முன் நிற்கும் சம்பவத்தைக் குறிப்பிட விரும்புகிறேன். எனது தமையனாரும் எனது குருநாதரில் முதல்வரும், மகா வித்வானுமான காலஞ்சென்ற பிடில் வித்வான் செம்மங்குடி ஸ்ரீ நாராயணஸ்வாமி அய்யரவர்களை இசை உலகம் மறந்திருக்க முடியாது. அந்நாளில் அவரது பிடில் பக்க வாத்திய மில்லாது பெரிய பாட்டுக் கச்சேரியே இருந்ததில்லை. ஒரு சமயம் அவரும், ஸ்ரீ மகாராஜபுரம் அய்யரவர்களும் தீராத மனஸ்தாபமாக இருந்தனர். ஒருவரோடொருவர் பேச்சு வார்த்தைகூடக் கிடையாது. இருவரும் எங்காவது எதிர்பாராது சந்தித்தால்கூட ஜாதி ரிஷபங்கள் முறைத்துக்கொள்வது போல் முறைத்துக் கொண்டு போய்விடுவார்கள்.

ஆனால் அப்போதும் மகாராஜபுரம் அவர்களின் கச்சேரியில் ஸ்ரீ நாராயணஸ்வாமி அய்யர் வயலின் வாசிப்பதுண்டு. அப்போது இருவருக்கும் வாக்குவாதமில்லாமல் கச்சேரி சுமுகமாக நடப்பதே துர்லபமாக இருக்கும்.

அக்காலத்தில் திருவையாற்றில் சத்குரு தியாகப்பிரம்மத்தின் உத்ஸவம் இரண்டு மூன்று கட்சிகளாகப் பிரிவுபட்டு நடந்து வந்தது. சின்னக் கட்சி உத்ஸவத்தில் ஸ்ரீ மகாராஜபுரம் அய்யரவர்கள் கச்சேரி நடந்து கொண்டிருந்தது. தோடி ராகத்தை அற்புதமாகப் பாடிக்கொண்டு வந்தார் அய்யர் அவர்கள். அதைக் கேட்டுக்கொண்டு எட்டி உட்கார்ந்திருந்த ஸ்ரீ செம்மங்குடி நாராயணஸ்வாமி அய்யர் அவர்களின் கண்களிலிருந்து தாரை தாரையாக ஆனந்த பாஷ்பம் பெருகிற்று. மெய் மறந்து ஆஹாகாரம் செய்து கொண்டு ஆனந்தக் கூத்தே ஆடினார் அவர் என்று சொல்லலாம்.

கச்சேரி முடிந்து ஸ்ரீ விசுவநாதய்யரவர்கள் மேடையிலிருந்து இறங்கி வந்தார். அந்தக் கூட்டத்தை விலக்கிக் கொண்டு எனது தமையனார் நேராக விசுவநாதய்யரிடம் வந்து, ஏக வசனத்தில், ''ஏ விசுவநாதா, என்ன தோடி பாடிவிட்டாய்! மோகனாஸ்திரமாகப் போட்டுவிட்டாய்! எனது இதயமே கரைந்து விட்டது'' என்று கண்களில் நீர் ததும்பக் கூறி அவரை அணைத்துக் கொண்டார். ''ஆண்டவனுக்கும் சத்குருவுக்கும் அர்ப்பணமாகும் தெய்விகமான சங்கீதம் பாடிவிட்டாய்'' என்று வாய் விட்டுச் சொன்னார். பிறகு பழையபடியே மனஸ்தாபத்துடன் போய் விட்டார். பிணவுபட்ட உள்ளங்களை

யும் பிணைத்துவைக்கும் பெருமை சத்தியமான சங்கீதத்துக்கே - உண்டு என்பதற்கு இது அத்தாட்சி அல்லவா ?

ஸ்ரீ அய்யரவர்கள் மிகவும் இளகிய மனமுள்ளவர். நல்ல தெய்வ பக்தியுள்ளவர். சத்குரு தியாகப் பிரம்மத்தினிடம் அளவிலடங்காத உண்மையான ஈடுபாடு உள்ளவர். மயிலாப்பூரில் உள்ள தியாகராஜ வித்வத் ஸமாஜம் என்னும் ஸ்தாபனத்தில் சத்குரு தியாகராஜ ஸ்வாமிக்குத் தாம் சம்பாதித்த பொருளிலிருந்து ஓர் ஆலயம் கட்டி ஸ்வாமிகளின் விக்ரஹத்தைப் பிரதிஷ்டை செய்து சாசுவதமான தர்மம் செய்துள்ளார். இது போல் ஒரு தர்மத்தைச் செய்துள்ள சங்கீத வித்வான் ஸ்ரீ மகாராஜபுரம் அய்யர் ஒருவர்தான் என்றே துணிந்து கூறுவேன்.

கானத்திலும், ஞானத்திலும், தானத்திலும் சிறந்த ஸ்ரீ அய்யரவர்கள் மேலும் அநேக வருடங்கள் திடகாத்திரத்துடன் கான மழையை வர்ஷித்துக்கொண்டு என்போன்ற சிஷ்ய வர்க்கங்களை ஆசீர்வதிக்க ஆண்டவன் அருள் பாலிப்பாராக!



மணிவிழா கொண்டாடிய
ராஜமாணிக்கம் பிள்ளை தம்பதியினர்

★

**எ**னது சங்கீத வாழ்வின் ஆரம்ப காலம் முதல் என்னுடைய கச்சேரிகளுக்கு ஏராளமாகப் பக்க வாத்தியம் வாசித்து வந்த சங்கீத கலாநிதி வயலின் ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளையவர்களைப் பற்றிக் கூற எனக்கு நல்ல சலுகையே உண்டு. அந்தச் சலுகையுடன் இன்று அவரைப் பற்றி நாலு வார்த்தைகள் எழுதி மன நிறைவு பெறுகிறேன்.

ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை அவர்கள் இசை உலகுக்குக் கிடைத்த ஒரு விலை மதிக்க முடியாத மாணிக்கமாவார். இன்று அறுபத்தி ஆறு வயது ஆகும் நம் பிள்ளையவர்கள் அதி பால்யத்திலேயே மேடைகளில் கச்சேரிக்கு வாசித்துப் பிரபலமடைந்த வித்வான்கள் வரிசையில் ஒருவர். கோனேரி ராஜபுரம் ஸ்ரீ வைத்தியநாத அய்யர், ஸ்ரீ பூச்சி ஸ்ரீநிவாசய்யங்கார் முதலிய எல்லாப் பெரிய வித்வான்களுக்கும் பக்க வாத்தியம் வாசித்து வந்த மகாவித்வான் அவர்.

வயலின் வாத்தியத்தில் தமக்கு நிகர் இல்லாத மகா வித்வான் திருக்கோடிக்காவல் கிருஷ்ணய்யரின் சிஷ்ய பரம்பரையில் வந்தவர் ஸ்ரீ பிள்ளை. திருக்கோடிக்காவல் கிருஷ்ணையரின் சிஷ்யரான திருக்கோடிக்காவல் ஸ்ரீ ராமஸ்வாமி அய்யரிடம் குருகுல வாசம் செய்து, அவர் காலமான பிறகு திருவிசைநல்லூர் நாராயணசாமி அய்யர், வேணுகானம் நாகராஜ ராவ் உமையாள்புரம் சுவாமிநாதய்யர் முதலான மகா வித்வான்களிடம் பயின்று அவர்களுடைய கச்சேரிகளில் பக்க வாத்தியம் வாசித்து நல்ல அநுபவமும் யோக்யதையும் அடைந்தார். பலரிடம் பயின்றும் தமக்கென ஒரு தனிபாணியை வயலினில் வகுத்துக் கொண்ட மேதை ஸ்ரீ பிள்ளை. சென்ற ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக இசையரங்குகளில் பெரிய வித்வான்கள் முதல் சிறிய வித்வான்கள்வரை எல்லோரிடமும் ஒரே போன்ற அநுகூல மனப்பான்மையுடன் பக்க வாத்தியம் வாசித்துக் கச்சேரியைத் தம் ஒருவரின் வெற்றியாக மட்டும் ஆக்கிக் கொள்ளாமல் மொத்தமாக வெற்றியடையச் செய்து வரும் தீரர் அவர்.

ஸ்ரீ பிள்ளையவர்கள் பக்க வாத்தியம் வாசிக்கும் கச்சேரிகளில் தாம் மாத்திரம் நல்ல பெயர் வாங்க வேண்டும் என்று எண்ணுவதே யில்லை. பாடுபவரைப் பெரிதாக்கிக் கரகோஷம் வாங்கிக் கொடுத்துவிட்டுத் தாமும் கரகோஷம் பெறுவதுதான் அவரது வழக்கம். ஒரு கச்சேரியில் பாட்டு, பிடில், மிருதங்கம், மற்றும் உள்ள பக்க வாத்தியங்கள் எல்லாம் சேர்ந்து கச்சேரி மொத்தமாகப் பிரமாதம் என்றாக்கிவிடும் பெரிய மனசு படைத்த பெரியார் ஸ்ரீ பிள்ளையவர்கள்.

ஸ்ரீ பிள்ளையவர்களிடம் உள்ள விசேஷங்கள் பல. அவைகளில் இசை அரங்கில் பக்க வாத்தியம் வாசிப்பது எப்படி என்பதற்கு இளம் பிடில் வித்வான்கள் ஸ்ரீ பிள்ளையவர்களை ஆதர்சமாக வைத்துக் கொள்வது மிகவும் அவசியமாகும். கச்சேரி தொடங்கியது முதல் பாடுபவரை அயர விடாமல் ஊக்கம் உண்டாகும் வண்ணம் தூண்டிக் கொண்டே வாசித்து வருவார். ஒரு வித்வான் பாடும்போது பக்க வாத்தியம் வாசிப்போர் முகத்தில் யாதொரு பாவமுமில்லாமல் ஏதோ ஆயத்தைக் கழிப்பது போல் உட்கார்ந்திருந்தால் பாடுபவருக்கு உற்சாகம் வருமா? ரசிகர்களும் இதே போல் இருந்துவிட்டால் கந்தர்வன் பாடினாலும் கச்சேரி சுகப்படவே படாது. ஊக்கம்தான் கலையை மிளிரவைக்கும் மருந்து என்பதை நன்கறிந்தவர் ஸ்ரீ பிள்ளை. ஒருவர் காவடி எடுத்து வர, பக்கத்திலுள்ள பக்தர்கள் 'வேல் வேல்' என்று கோஷமிட்டு அவரைத் தள்ளி வரும் பொழுதுதான் காவடி தூக்குபவருக்கே ஆவேசம் உண்டாகி அவர் தம்மை மறக்கிறார். அது போல் ஒரு கலைஞர் தமது திறமைகளுக்கு ஆமோதனம் பெறும் போதுதான் அவரே எதிர்பாராத விதமாகப் புதிது புதிதாகக் கற்

பனிகள் உதயமாகும்; இதனை ஸ்ரீ பிள்ளை அவர்கள் நன்கு உணர்ந்து பாடுபவரை ஊக்குவார். பக்கவாத்தியம் எந்த அளவுக்கு வாசிக்க வேண்டும், வித்துவான் பாடும்போது எப்படி வாசிக்க வேண்டும், எப்பொழுது வாசிக்கக் கூடாது இதெல்லாம் ஸ்ரீ பிள்ளையவர்களுக்கு மிகவும் ஸ்வாதீனமே ஆகி விட்ட கலை என்று கூறலாம். வித்துவான் ராகம் பாடும்பொழுது கூடவே வாசித்துப் பாடுபவரை உபத்திரவம் செய்ய மாட்டார். தாய்ஸ்வர ஸ்தானங்களைச் சுத்தமாகச் சேர்த்துக் கொண்டு வில்லைப் போட்டு நாதத்தை மட்டும் எழுப்பி வருவார். பாடுபவர் கொஞ்சம் இடைவெளி கொடுத்தால் அவர் பாடியதின் கொழுந்தை அழகாக ஜ்வலிக்கச் செய்வார். அது சதஸைப் புல்லரிக்கச் செய்யும். தனியாக ஆவர்த்தனம் வாசித்தாரானால் தனி பிடில் கச்சேரிபோல் செய்யவே மாட்டார். பாடியவர் எவ்வளவு பாடினாரோ அதில் பாதி நேரத்தில் அழகாக ஜீவபுஷ்டியுடன் வாசித்துக் கரகோஷம் பெறுவார். இதுதான் அவரது பெருந்தன்மை.

ராகங்களை ஜீவசக்தியுடன் வாசிப்பது ஸ்ரீ பிள்ளையவர்களின் தனிச் சிறப்பு. கல்பனா ஸ்வரம் வாசிக்க ஆரம்பித்து விட்டாரெனில், ஆகா, அதுதான் என்ன ஸர்வலகு? டில்லி மட்டம் என்று ஒரு குதிரையைச் சொல்லுவார்களே, அதன் கதியைப்போல வித்நியாசம் செய்து சபையை கலகலக்கச் செய்துவிடுவார்.

கச்சேரிக்கு அரை மணி நேரத்துக்கு முன்னதாக வந்து விடுவார் ஸ்ரீ பிள்ளை. பரம லௌகிகம் தெரிந்தவர். தமிழில் நல்ல புலமை உள்ளவர். தேர்ந்த பேச்சாளர், குணவந்தர். எப்பொழுதும் சந்தோஷமான தோற்றம் பெற்றவர். தெய்வ பக்தி நிரம்பியவர். தர்மம் செய்யச் சலிக்கவே மாட்டார். எல்லோரிடமும் மிகவும் பரிவுடன் பழகும் தன்மையுள்ளவர். சிநேக தர்மத்தில் ஸ்ரீ பிள்ளையவர்கள் முதல்வராக நிற்பவர். தொழில் துறையில் நல்ல வெற்றியும் நல்ல கௌரவமும் பெற்ற அறிவாளி அவர்.

ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை அவர்களின் தங்கமான மனத்தை விளக்கும் ஒரு சம்பவத்தைக் கூற விரும்புகிறேன். இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்பு, திருவிசநல்லூர் ஸ்ரீதர ஐயர்வாள் மடத்துக்கு ஒரு நிதி வசூலுக்காகக் கும்பகோணத்தில் என் கச்சேரி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஸ்ரீ சௌடையா அவர்களை வயலினுக்கு ஏற்பாடு செய்திருந்தது. ஸ்ரீ பாலக்காடு மணி ஐயரவர்கள் மிருதங்கம். கச்சேரி மாலை ஐந்து மணிக்குப் போட்டிருந்தது. ஆறுமணியும் ஆகி விட்டது; ஸ்ரீ சௌடையா அவர்கள் வரவில்லை. ரஸிகர்கள் ஏராளமாகக் கூடி விட்டார்கள். அதற்கு மேலும் அவர்களின் பொறுமையைச் சோதிக்க நான்விரும்பவில்லை.

நம் பிள்ளை அவர்கள் என் பக்கத்தில் தான் நின்று கொண்டிருந்தார். நான் அவர்களைப் பார்த்து, 'பிள்ளைவாள், தங்கள் பிடிலை எடுத்து வரச் சொல்லுங்கள்' என்று கேட்டுக் கொண்டேன். ஐந்து நிமிஷங்களில் பிடில் வந்து விட்டது. கச்சேரி ஆரம்பமாகிக் குதூகலமாக நடந்து கொண்டிருந்தது. வரும் வழியில் மழையில் கார் சிக்கிச் சிரமப்பட்ட ஸ்ரீ சௌடையா அவர்கள் மாலை ஏழரை மணிக்கு வந்து சேர்ந்தார். அவரை முதலில் பார்த்தவர் பிள்ளைவாள்தான். உடனே மேடையிலிருந்து எழுந்து திரைக்குப் பின் போய் விட்டார். ஸ்ரீ சௌடையா வந்ததை வேறு யாரும் கவனியாததால் பிள்ளையின் செயலைக் கண்டு சபையில் கொஞ்சம் சலசலப்பு ஏற்பட்டது. யாருக்கும் இன்னதென்றே புரியவில்லை. சில விநாடிகளில் ஸ்ரீ சௌடையா அவர்களின் கையைப் பிடித்து மேடைக்கே அழைத்து வந்தார் பிள்ளை அவர்கள். ஒரே ஆரவாரம் எழுந்தது. ஸ்ரீ சௌடையா அவர்களின் கழுத்தில் ஒரு மாலையைப் போட்ட பிள்ளையவர்கள், ''அவர்கள் வரும் வரை ரஸிகர்களுக்கு ஏமாற்றமில்லாமல் நான் வாசித்தேன். இனி ஸ்ரீ சௌடையா அவர்கள்தான் வாசிக்க வேண்டும்'' என்று சொல்லிப் பெரிய கரகோஷத்திடையே சௌடையா அவர்களை மேடையில் இருத்தி விட்டு எதிர் வரிசையில் அமர்ந்து கச்சேரியைக் கேட்கலானார். அன்று அவர் தமது பெருந்தன்மைக்காகப் பெற்ற பாராட்டுதலை நான் இன்றும் நினைத்துப் பார்த்து மகிழ்கிறேன்.

பொதுவாக ஒரு பெரிய வித்துவானை ஏற்பாடு செய்திருக்கும் இடத்தில் வேறொரு பெரிய வித்துவானைக் கூப்பிட்டால் வருவதே இல்லை. அப்படி வந்தாலும் குறிப்பிட்டிருந்த வித்துவான் பாதிக் கச்சேரியில் வந்தால் அவர் வாசிப்பதற்கு அநுமதிக்க மாட்டார்கள். இந்த வழக்கத்தைத் தைரியமாக மீறி இசை உலகத்துக்கு இங்கிதமும் விநயமும் தான் மிகவும் அவசியம் என்பதைப் போதிப்பது போல் நடத்து காட்டியவர் பிள்ளையவர்கள்.

ஸ்ரீ பிள்ளையவர்களுக்கு நீண்ட ஆயுளையும், நல்ல தேக பலத்தையும், மேலும் அநேகம் இளம் வித்துவான்களை முன்னுக்குக் கொண்டு வந்து இசை உலகுக்குத் தொண்டு புரியும் பேற்றையும் இறைவன் அருள்வாராக.



கோடம்பாக்கம் வடபழனி ஆண்டவர் கோயிலில்

30-12-63 திங்கட்கிழமை

## ஆர்த்ரா தரிசனம்



உங்கள் சமையல்
ருசிகரமாக விளங்க
உதவுவது

# விமலா

**சுத்திகரிக்கப்பட்ட தாவர எண்ணை**

(முக்கிய அமில சத்துக்கள் மிதமாக அடங்கியது)

Contains essential unsaturated acids



விமலா உதவியினால் லேசாகவோ, நன்றாகவோ எப்படி வறுத்தாலும் அந்தந்த பதார்த்தத்தின் இயல்பான சுவை வெளிப்படுகிறது.




**கவர்ன்மெண்ட் ஹைட்ரோஜெனேஷன் பாக்டரி**

(பொதுத்துறையில் உள்ள ஒரே வனஸ்பதி தொழிற்சாலை)

**கோழிக்கோடு - கேரளம்**

---




(Registered)

இந்தச் சின்னம் கவர்ன்மெண்ட் ஆப் இந்தியா டிரேட் மார்க் ரிஜிஸ்டிரியின் 30-வது தொகுதியில் டிரேட் மார்க் நெ. 200465 கீழ் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**ஸ்ரீ கணேஷ்ராம்ஸ்**

**திடீரெக்ஸ்** *Dhideerex* (FOR INSTANT PREPARATION)

## திடீர் இட்லி, சாம்பார்

(2 தனி பவுடர்கள்)

3 நிமிஷங்களில் தயார்!

மேற்படி பவுடர்களைத் தண்ணீரில் கலந்த 5 நிமிஷங்களில் உபயோகத்திற்குத் தயார். ஊற வைக்கவோ, அரைக்கவோ தேவையில்லை.

**ஸ்ரீ கணேஷ்ராம் & கோ.**

(போன்: 23665)

46, தம்பு செட்டித் தெரு, சென்னை-1

---

பிரத்தியேக

# கேமல்

இங்க்






காம்லின் பிரைவேட் லிமிடெட்
பம்பாய்-18 : கல்கத்தா-1.

# மேரியா தெரீஸா

சரித்திர மாணாக்கன்

ஹாப்ஸ்பர்க் வமிசத்தினர் என்பவர்கள் ஒரு ஜெர்மானியப் பிரபு குடும்பத்தின் வழித் தோன்றல்கள். இவர்கள் பல கிளையினராகப் பிரிந்து, ஜெர்மனி, ஆஸ்திரியா, ஹங்கேரி, ஸ்பெயின் முதலிய நாடுகளில் பல காலங்களில் அரசு செலுத்தி வந்தார்கள். இவர்களில் சிலர், 'புனித ரோம் ஏகாதிபத்தியத்தின் சக்கரவர்த்திகள்' என்ற பெருமையான ஒரு பட்டத்தைப் பெயரளவுக்கு வகித்து வந்தார்கள்.

இந்த வமிசத்தைச் சேர்ந்த ஆறாவது சார்லஸ் என்ற மன்னன், ஆஸ்திரியா, ஹங்கேரி, பொஹிமியா, சிலீஷியா முதலிய நாடுகளைக் கொண்ட ஆஸ்திரிய – ஹங்கேரிய ஏகாதிபத்தியத்தை 1711ம் ஆண்டிலிருந்து 1740ம் ஆண்டு வரை ஆண்டு வந்தான். இவனுக்கு ஆண் சந்ததிகள் இல்லை; இரண்டே பெண்கள்தான். மூத்தவள் பெயர் மேரியாதெரீஸா. இவள், சிறு வயதிலிருந்தே மிகவும் சூடிகையாக இருந்தாள். இவளுடைய நுண்ணறிவையும் திண்ணிய உள்ளத்தையும் கண்டு சார்லஸ் மன்னன் பெருமிதம் கொண்டிருந்தான்.

தெரீஸாவுக்குப் பதினெட்டாவது வயது நடந்து கொண்டிருந்தது. சார்லஸ் மன்னன் இவளை, பிரான்ஸிஸ் ஸ்டீபன் என்ற ஒரு பிரபு குமாரனுக்குத் திருமணம் செய்து கொடுக்க வேண்டும் என்று விரும்பினான். இதற்குத் தகுந்தாற் போல் தெரீஸாவும் பிரான்ஸிஸ் மீது காதல் கொண்டவளாய், அவனையே விவாகம் செய்து கொள்ள வேண்டும் என்று ஆவலாக இருந்தாள். அவனும் இவள் மீது காதல் கொண்டிருந்தான். இருவரும் காதல் கடிதங்கள் பரிமாறிக் கொண்டு வந்தனர்.

தெரீஸாவின் அப்போதைய மன நிலை எப்படியிருந்தது பாருங்கள்: ''அவள் இரவு முழுவதும் பிரான்ஸிஸை நினைத்துப் பெருமூச்சு விடுகிறாள். அவள் தூங்கப் போகிறாள் என்றால், அவனைப் பற்றிக் கனவு காண்பதற்குத்தான். தூக்கம் கலைந்து எழுந்து விட்டால் அவனைப் பற்றித்தான் பேசுகிறாள். தனக்காகவே அவன் பிறந்திருப்பதாக அவள் நம்புகிறாள். அவனைச் சிறிது நேரமாவது பிரிந்திருக்க அவள் தயாராக இல்லை.'' கடைசியில், 1736ம் வருடம் பிப்ரவரி மாதம் பன்னிரண்டாம் தேதி, பிரான்ஸிஸ் ஸ்டீபனுக்கும் தெரீஸாவுக்கும் திருமணம் நடைபெற்றது. அவர்கள் கருத்தொருமித்த கணவனும் மனைவியுமானார்கள்.

இந்த விவாகம் நடைபெற்ற நான்காவது வருஷம், அதாவது 1740ம் வருஷம் நவம்பர் மாதம் இருபதாம் தேதி, சார்லஸ் மன்னன் தன்னுடைய ஐம்பத்தாறாவது வயதில் கண் மூடிக் கொண்டான். அதற்குச் சிறிது காலம் முன்பு, தனக்குப் பின்னால் தெரீஸாவே, பட்டத்துக்கு வரவேண்டுமென்று அதிகார பூர்வமான ஒரு பிரகடனத்தை வெளியிட்டிருந்தான். இதை அனுசரித்து, அவன் இறந்த அன்றைய தினமே தெரீஸா, சக்கரவர்த்தினியாகப் பட்டமேற்றுக் கொண்டாள்; அன்றைய தினமே மந்திரி சபையைக் கூட்டி அரச காரியங்களைக் கவனிக்கத் தொடங்கினாள்; அடுத்த மாதமே, தன் கணவனைத் தன்னோடு சேர்ந்து ஆட்சி நடத்துகின்ற கூட்டு ரீஜெண்டாக நியமித்தாள். கணவனிடத்தில் தனக்குள்ள மதிப்பைக் காட்டிக் கொள்ளும் பொருட்டு இப்படிச் செய்தாளே தவிர, உண்மையில் அரச காரியங்கள் அனைத்தையும் தானே முன்னின்று நடத்தி வந்தாள்.

ஆள்வதற்கான எல்லாத் தகுதிகளும் இவளுக்குப் பிறவியோடு ஒட்டி வந்தன. ''உலகத்தில் உள்ள எல்லாப் பெண்மணிகளையும் ஒன்று சேர்த்து வைத்து, இவர்களில் யாரை ஆஸ்திரிய சிங்காதனத்தின் வாரிசாகத் தெரிந்தெடுக்கலாம் என்று கேட்டால், நிச்சயமாகத் தெரீஸாவின் மீதுதான் எல்லார் பார்வையும் விழும்'' என்று ஒரு சரித்திராசிரியன் கூறுகிறான். இவள் நல்ல அழகி; முகத்தில் ராஜ களை தாண்டவமாடியது. நன்றாகப் பாடுவாள்; நாட்டியமாடுவாள்; வாத்தியங்கள் வாசிப்பாள்; லத்தீன், பிரெஞ்சு, இத்தாலிய ஸ்பானிஷ், ஜெர்மன் மொழிகளில் சர்வ சரளமாகப் பேசுவதோடு ஓரளவு புலமையும் பெற்றிருந்தாள். எல்லாவற்றுக்கும் மேலாக, பெருந்தகைமையும் ஆண்தகைமையும் சேர்ந்து இவளிடம் குடிகொண்டிருந்தன. இதை யெல்லாம் தெரிந்துதான் சார்லஸ் மன்னன், தனக்குப் பின் பட்டமேற்கவல்ல வாரிசாக இவளை நியமித்தான்.

தெரீஸா, ஆளத் தொடங்கிய சொற்ப காலத்துக்குள்ளாகவே, ஜனங்களுடைய விசுவாசத்தையும் நன்மதிப்பையும் பெற்றுக் கொண்டு விட்டாள். அவர்களுடைய குறை நிறைகளை அவ்வப்பொழுது கவனித்து ஆவன செய்து வந்தாள்.

இவள் முதல் ஆண் குழந்தைக்குத் தாயாயிருந்த சமயம், ஒரு வீதியில், வறுமையினால் உடல் மெலிந்து கிடந்த ஒரு பெண்மணியைக் கண்டாள். அப்பொழுது அவளுடைய குழந்தை, போதிய தாய்ப்பால் பெற முடியாமல் அழுது கொண்டிருந்தது. இந்தக் காட்சி, தெரீஸாவின் உள்ளத்தைத் தொட்டு விட்டது. உடனே ஒரு தங்க நாணயத்தை அந்தப் பெண்மணிக்குக் கொடுக்கச் செய்தாள். ஆனால் அவள் அதைப் பெற்றுக் கொள்ள மனமில்லாமல், ''என் குழந்தைக்குப் பால் கொடுக்கச் சக்தியில்லாமல் இருக்கும் எனக்கு இந்தக் காசு எதற்குப் பிரயோசனம்?'' என்று முணு முணுத்தாள். இது தெரீஸாவின் காதில் விழுந்தது. உடனே



அந்தக் குழந்தையைத் தன்னிடம் எடுத்து வரச் செய்தாள்; சாவதானமாக ஓரிடத்தில் அமர்ந்து கொண்டு, அந்தக் குழந்தைக்கு, தானே பால் கொடுத்தாள்.

இப்படித் தாய்மைக்குரிய பண்புகள் இவளிடம் நிறைந்திருந்ததன் காரணமாக, ஜனங்கள், இவளை, தங்களுடைய தாயாகக் கருதிப் போற்றினார்கள்; இவள் சென்றவிடமெல்லாம், 'எங்கள் தாய் வாழ்க!' என்று வாழ்த்தினார்கள்.

தெரீஸா ஜனங்களுக்கு அரசியாக மட்டுமில்லாமல் அரசனாகவும் இருந்தாள். இவளிடம் நிறைந்திருந்த ஆண்தகைமைதான் இதற்குக் காரணம். இவளுக்கு முடிசூட்டு விழா நடைபெற்று முடிந்த பிறகு ஒரு நாள், இவள் தலை மீது மகுடம் தரித்துக் கொண்டு குதிரை மீது அமர்ந்து பவனி வந்து கொண்டிருந்தாள். அப்பொழுது தன் கையில் இருந்த உடைவாளை, திசைக்கொருதரமாக நீட்டி நீட்டிக் காட்டி வந்தாள். இவள் இப்படிச் செய்தது, 'இந்த வாளாயுதம் என் கையில் இருக்கிற வரையில், எந்தத் திசையிலிருந்து சத்துருக்கள் வந்தாலும் நான் அஞ்சமாட்டேன்' என்று சொல்லாமல் சொல்லிக் காட்டுவதுபோலிருந்தது. அப்பொழுது ஜனங்கள், 'எங்கள் அரசி வாழ்க' என்று மட்டும் சொல்லி நிறுத்திக் கொள்ளாமல், 'எங்கள் அரசன் வாழ்க' என்றும் சேர்த்துச் சொல்லி வாழ்த்தினார்கள். இங்ஙனம் தெரீஸா, ஜனங்களுடைய அபிமானத்தைப் பெற்று வந்த போதிலும், ஒரு சிலர், இவள் பட்டமேற்றதற்கு எதிர்ப்புக் காட்டி வந்தனர்.

'இவளைத் தன் வாரிசாகச் சார்லஸ் நியமித்துப் பிரகடனம் வெளியிட்டுப் போயிருந்தால் என்ன? பவேரியாவின் இரண்டு லட்சம் துருப்புக்களுக்கு முன்னர், இதைப் போல் உலகத்தில் இன்னும் எத்தனை பிரகடனங்கள் வெளிவந்தாலும் எல்லாம் காற்றிலே பறந்து போகும்' என்று மிடுக்காகக் கூறினர் சிலர்.

இவர்கள் இப்படிச் சொல்லி வந்ததற்கேற்றாற்போல், தெரீஸா, பட்டமேற்ற சிறிது காலத்துக்குள், ஜெர்மனியைச் சேர்ந்த சிற்றரசர்கள் சிலர், இவளுக்கு ஆளும் உரிமை கிடையாது என்று சொல்லிக் கண்டனம் தெரிவித்தார்கள். ப்ரஷ்யா நாட்டு மன்னனாகிய மகா பிரடெரிக் என்பவன், ஆஸ்திரியாவின் ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்த ஸிலீஷியாவின் சில பகுதிகள் மீது தனக்குப் பாத்தியதை உண்டென்று சொல்லி, இவள்மீது போர் தொடுக்கவே துணிந்து விட்டான். இதற்கு முன்னர், தன் கோரிக்கைக்கு இணங்கி விட்டால், தெரீஸாவை, ஆஸ்திரியாவின் அரசியாக நிலைத்திருக்கும்படி செய்ய, தான் வழிதேடிக் கொடுப்பதாக, இவளிடம் கருணை காட்டுகிறவன் போல் ஒரு செய்தி விடுத்தான். இவள் அதற்கு, 'ஆஸ்திரியாவின் ஒரு சிறு பகுதியைக் கூட விட்டுக் கொடுக்க முடியாது. இதற்காக உன்னை எதிர்த்துப் போராடி, அழிந்துபடுவோமே தவிர, உன்னோடு வாதிட்டுப் பொழுது போக்கிக் கொண்டிருக்க மாட்டோம்' என்று மிடுக்காகப் பதில் விடுத்தாள். ஆதிக்க வெறி பிடித்த பிரடெரிக் மன்னன் இனிச் சும்மா இருப்பானா? 1741ம் வருஷம் ஜனவரி மாதம் முதல் தேதி போர் தொடுத்து விட்டான். இந்தச் செய்தியைத் தெரீஸா, ஹங்கேரியப் பிரபுக்கள் சபைக்குத் தெரிவித்தாள்.

கைக் குழந்தையாயிருந்த ஜோஸப்பைத் தன் கைகளில் வைத்துக் கொண்டு வந்து நின்று, நாட்டுக்கு ஏற்பட்டிருக்கிற ஆபத்தை உணர்த்தி உருக்கமாகப் பேசினாள். பிரதிநிதிகள் அத்தனை பேரும் உணர்ச்சிவசப்பட்டவர்களாய் 'எங்கள் அரசிக்காகவும் அவள் குடும்பத்துக்காகவும் உயிர் கொடுப்போம்; எங்கள் அரசன் மேரியா தெரீஸாவுக்காக உயிர் கொடுப்போம்' என்று ஒரு முறைக்கு இரு முறையாக ஒரே குரலில் கூறினார்கள்.

இங்ஙனம் ஜனங்களுடைய பூரண விசுவாசத்தையும் வீரத்தையும் துணையாகக் கொண்டு தெரீஸா, பிரடெரிக் மன்னனை எதிர்க்கத் தயாரானாள். ஆனால் இதற்குள் பவேரியா நாட்டுச் சிற்றரசன், பிரான்ஸோடுசேர்ந்துகொண்டு, இவள்மீது போர்தொடுத்



தான்: இது தெரிந்த பிரடெரிக் மன்னன், பவேரியாவின் கை ஓங்கி விடப் போகிறதே என்பதற்காக, சிலீஷியாவில் ஒரு பகுதியையேனும் விட்டுக் கொடுப்பதாக இருந்தால், தான் போர் தொடுக்காமல் நிறுத்திக்கொண்டு விடுவதாகவும், இவளுக்கு உதவி செய்வதாகவும் தெரிவித்தான். தன் வலிமையையும் மாற்றான் வலிமையையும் நன்குணர்ந்த தெரீஸா இதற்கு இணங்கினாள். 1742ம் வருஷம் பெர்லின் சமரஸ ஒப்பந்தம் ஏற்பட்டது. சிலீஷியாவின் ஒரு பகுதி, பிரடெரிக் மன்னனுடைய ஆதிக்கத்துக்குட்பட்டது.

ஆனால் இவன் இதனோடு திருப்தியடையவில்லை. மீண்டும் இவள் மீது போர் தொடுத்தான். இவளும் விடாது போர் நடத்தினாள். பயனில்லை. 1748ம் வருஷம் சமாதான ஒப்பந்தம் செய்து கொண்டாள். இதனால் ப்ரஷ்யாவின் செல்வாக்கு அதிகரித்தது.

ப்ரஷ்யாவின் செல்வாக்கு அதிகரிப்பதை மற்ற ஐரோப்பிய வல்லரசுகள் அவ்வளவாக விரும்பவில்லை. எனவே ப்ரஷ்யாவுக்கு விரோதமாக, பிரான்ஸ், ருஷ்யா, ஸ்வீடன் முதலிய நாடுகள் ஆஸ்திரியாவுடன் கூட்டுச் சேர்ந்து கொண்டன. ப்ரஷ்யாவுக்கு இங்கிலாந்து துணையாக நின்றது. இதன் விளைவாக, 1756ம் வருஷத்திலிருந்து 1763ம் வருஷம் வரை ஏழு வருஷ காலம் இந்த இரண்டு கூட்டுகளுக்கும் விட்டு விட்டுப் போர் நடைபெற்றது. இதுவே ஐரோப்பிய சரித்திரத்தில் முக்கிய இடம் பெற்றுள்ள 'ஏழு வருஷ யுத்தம்' எனப்படுவது. இந்த யுத்தத்தில் ஏராளமான உயிர்ச் சேதமும் பொருட் சேதமும் ஏற்படுவது கண்டு தெரீஸா பெரிதும் வருந்தினாள். ப்ரஷ்யாவுடன் சமாதானம் செய்து கொள்வதே நல்லதென்று கருதினாள். அப்படியே 1763ம் வருஷம் ஏற்பட்ட சமாதான ஒப்பந்தப்படி சிலீஷியா முழுவதும் பிரடெரிக் மன்னனுடைய ஆதிக்கத்துக்குட்பட்டது.

இதற்குப் பிறகு தெரீஸா, தன் ஆயுள் உள்ள வரையில் சமாதானத்துக்காகவே உழைத்து வந்தாள். தான் பட்ட மேற்ற பிறகு நடைபெற்ற யுத்தங்களில், உயிரையும் பொருளையும் இழந்து விட்ட குடும்பங்களுக்கு உதவி கிடைக்கச் செய்தாள்.

இங்ஙனம் தான் ஆளப் பிறந்த அரசி என்பதை உணர்ந்திருந்தாலும் தெரீஸா, தன் கணவனிடம் அதிக பக்தி கொண்டிருந்தாள்: தான் பட்டமேற்ற அடுத்த மாதம் அவனைத் தன்னோடு சேர்ந்து ஆளக் கூடிய கூட்டு ரீஜெண்டாக நியமித்ததோடு திருப்தியடையாமல், ஐந்து வருஷங்கள் கழித்து, 1745ம் வருஷம் அக்டோபர் மாதம் நான்காம் தேதி, முதலாவது பிரான்சிஸ் என்ற பட்டப் பெயருடன் முடிசூடச் செய்தாள். அவனும் புனித ரோம் ஏகாதிபத்தியத்தின் சக்கரவர்த்தியாகக் கௌரவிக்கப்பட்டான்.

1765ம் வருஷம் ஐம்பத்தேழாவது வயதில் தெரீஸாவின் கணவன் ஜன்னி கண்டு இறந்து போனான். இதற்குப் பிறகு தெரீஸா அதிகமாக வெளியே வரவில்லை. ஆயுள் முழுவதும் துக்கம் கொண்டாடினாள். தன் கணவன் அடக்கம் செய்த இடத்துக்கு அடிக்கடி சென்று அவனுக்காகப் பிரார்த்தனை செய்தாள்.

கணவன் இறந்த மறு வருஷம், தன் மகன் ஜோஸப்புக்கு முதலாவது ஜோஸப் என்ற பட்டப் பெயர் கொடுத்து முடிசூட்டு விழா நடத்தினாள்: இந்த விழாவில் மட்டும் உற்சாகத்தோடு கலந்து கொண்டாள். இப்படிக் கலந்து கொண்டாளே தவிர, அவனிடம் அரச அதிகாரங்கள் அனைத்தையும் ஒப்புவிக்கவில்லை; தானே எல்லாவற்றையும் மேற்போட்டுக் கொண்டு நடத்தி வந்தாள். இப்படி ஓயாது உழைத்து வந்ததனால் இவள் தேகம் நாளுக்கு நாள் மெலிந்து வந்தது. கடைசியில் 1780ம் வருஷம் நவம்பர் மாதம் இருபத்தொன்பதாம் தேதி, அறுபத்து நான்காவது வயதில் இறந்து போனாள். இவள் ஆண்டது மொத்தம் நாற்பது வருஷங்கள்.

தெரீஸா பெற்றது மொத்தம் பதினாறு. ஐந்து ஆண்கள்; பதினொரு பெண்கள். இவள் இறந்து போன போது, ஒன்பது பேர்கள் மட்டுமே உயிரோடு இருந்தனர்.

தெரீஸா, தன் சொந்தக் குடும்ப நலனைக் காட்டிலும் நாட்டு நலனுக்கே முக்கியத்துவம் கொடுத்து வந்தாள். பிரான்சின் நல்லுறவு ஆஸ்திரியாவுக்கு நீடித்திருக்க வேண்டும் என்பதற்காகத் தன் மகள் அண்டாய்நெட் என்பவளை, பிரெஞ்சு மன்னன் பதினாறாவது லூயிக்கு, அவன் இளவரசனாக இருந்த போது, விவாகம் செய்து கொடுத்தாள்.

பதினெட்டாவது நூற்றாண்டின் இடைக் காலத்தில், ஐரோப்பிய அரசவைகளில் அதிகமாகப் பிரஸ்தாபிக்கப்பட்டு வந்தவர்களில் தெரீஸா முக்கியமானவள்.

## நம்பகமான

# பார்கோ*

பார்கோ ஒரு நல்ல முதலீடு என்று, பார்கோ வண்டி வாங்கியவர்கள் தம் அனுபவத்தில் கூறுகின்றனர். பார்கோவை நீங்கள் நிச்சயமாக நம்பலாம். சாலையில் ஏற்படும் அதிர்ச்சியையும், பாரத்தால் உண்டாகும் அதிர்ச்சியையும் பார்கோ தாங்குகிறது. ஏனெனில் அதில் ராக்வெல் ஸ்டாண்டர்ட் டிம்கென் ஆக்ஸில்கள் பொருத்தப் பெற்றுள்ளன. அன்றியும் ராக்வெல் டிம்கென் ஆக்ஸில் காரணமாக பார்கோ அதிக பாரத்தைச் சுலபமாக ஏற்றிச் செல்கிறது. பார்கோ விலை குறைவு; எனவே அதிக வண்டிகள் வாங்கலாம்.

தென்னிந்தியாவில் பஸ் சொந்தக்காரர்கள் ஆண்டுதோறும் அதிகப்படியான பார்கோ வாங்குவதில் ஆச்சரியமில்லை.

### ஒவ்வொரு பார்கோ வண்டிக்கும் பூரண டிவிஎஸ் சர்விஸ் உண்டு

பஸ் சொந்தக்காரர்கள் தங்கள் பஸ் போக்குவரத்தைச் சிக்கன முறையில் நடத்துவதற்கு, தென்னிந்தியாவில் முக்கியமான நகரங்களில் டிவிஎஸ் தங்கள் மிக நவீன ஒர்க்ஷாப்களை அமைத்திருக்கின்றனர்; ஸ்பேர் உருப்புகளையும் வழங்குகின்றனர்.

*பிரிமியர் ஆட்டோமொபைல்ஸ் லிமிடெட், பம்பாய், அவர்களின் தயாரிப்பு



டி.வி. சுந்தரம் அய்யங்கார்
அண்ட் ஸன்ஸ்
பிரைவேட் லிமிடெட்

மதுரை - திருச்சி - திருநெல்வேலி
புதுக்கோட்டை - சேலம்
கோயமுத்தூர் - திருவனந்தபுரம்




சுந்தரம் மோட்டார்ஸ்
பிரைவேட் லிமிடெட்

மதராஸ் - பங்களூர்
செகந்திராபாத் (டெக்கான்)

சப் டீலர்: மனோரஞ்சன் கங்குலி & ஸன்ஸ் பிரைவேட் லிமிடெட்
9, ரு செயின்ட் லூயி, பாண்டிச்சேரி

# போலீஸ்காரச் சாமியார்

"சுவாமி! தங்களிடம் தெரிவித்துக் கொள்ள வேண்டிய விண்ணப்பம் ஒன்றிருக்கிறது!" என்று சுவாமி சகஜானந்தர் தமது மடத்துத் தலைவரிடம் பயபக்தியுடன் தெரிவித்துக் கொண்டார்.

"ஏன், உன் முகம் வாட்டமுற்றிருக்கிறது? கண்கள் கலங்கியிருக்கின்றனவே?" என்று தலைவர் வேதாந்த பாரதி பரிவுடன் விசாரித்தபோது சகஜானந்தர் தமது கையிலிருந்த ஒரு காகிதத்தைத் தலைவரிடம் மரியாதையுடன் கொடுத்தார்.

தலைவர் அதை வாங்கிப் பார்த்தார்: அது ஒரு தந்தி:

"தங்கள் தங்கை மாதவி இறந்துவிட்டாள். உடனே வரவும்" என்று அதில் இருந்தது.

"பாவம்!" என்று தலைவர் அனுதாபம் கூறிவிட்டுக் கண்களை ஒரு கணம் மூடினார். 'அவளது ஆத்மா ஆண்டவனது திருப் பாத கமலங்களை அடையட்டும்!' என்று மெதுவாகக் கூறிப் பிரார்த்தனை புரிந்தார். பிறகு "நீ போய் வா!" என்றார்.

இந்த அனுமதியைக் கேட்டு ஆச்சரியப்பட்டவர் போல் சகஜானந்தர் திகைத்து நின்றார்.

"ஏன் தாமதிக்கிறாய்? காலம் கடத்தாதே: சீக்கிரம் கிளம்பு!" என்று தலைவர் துரிதப்படுத்தினார்.

"மன்னிக்கணும். நான் எவ்வளவோ சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு பார்த்தும், என்னை மீறிக் கண்களில் கண்ணீர் துளித்துவிட்டது. நான் செய்த இந்தத் தவற்றுக்காகத் தேவரீர்...."

"என்னது?" என்று தலைவர் ஆச்சரியத்துடனும், சற்றுக் கோபத்துடனும் கேட்டார்:

"நான் ஒரு துறவி. எல்லாவற்றையும் துறந்தவனாகக் கருதப்படுபவன். ஆயினும் இரத்த பாசத்தின் மேலீட்டினால் என் கண்கள் கலங்கி...."

தலைவர், அவர் மேலே பேச வேண்டாமென்று கையைத் தூக்கி ஆட்டிச் சைகை செய்தார்.

"இந்தத் தத்துவத்தைப் பற்றி நாம் பிறகு சாவகாசமாய்ப் பேசிக் கொள்ளலாம். நீ உடனே கிளம்பு!" என்று கண்டிப்பான குரலில் உத்தரவிட்டு விட்டு எழுந்து சென்றார்.

மகாபலிபுரத்திலிருந்த தமது மடத்திலிருந்து கிளம்பிச் சகஜானந்தர் சென்னைக்குச் செல்லும் பஸ் ஒன்றில் ஏறிக் கொண்டார்.

சுவாமி சகஜானந்தரின் பூர்வாசிரமப் பெயர் சக்கரவர்த்தி நயினார் என்பதாகும். அவர் ஜைன மதத்தைச் சேர்ந்தவர். அவர் பள்ளிக்கூடத்தில் எட்டு வகுப்பு வரை படித்திருந்தார். அவருடன் கூடப் படித்த சிங்காரம் போலீஸ் இலாகாவில் சேர்ந்திருந்தார். அவருடைய தூண்டுதலின் மீது சக்கரவர்த்தியும் அந்த இலாகாவில் சேர்ந்திருந்தார். ஜைன மதத்தைச் சேர்ந்தவராக இருந்தும் கூட அவர் அந்த இலாகாவில் வேலை செய்ய விரும்பினார்: வேலூரில் போலீஸ் கான்ஸ்டேபிள் வேலைக்கான பயிற்சியும் பெற்றார். அது முடிந்த பிறகு வேலையையும் ஏற்றுக் கொண்டார்.




பயிற்சி பெற்று வந்த காலத்திலேயே அவருக்கு அந்தத் தொழிலில் ஏற்பட்டிருந்த மோகம் குறைந்து விட்டது. பிறகு வேலையை ஏற்றுக் கொண்டபோதோ அவருக்குச் சிறிது கூடப் பிடிக்கவில்லை.

காரணம், அவரது மத சம்பந்தப்பட்ட மனப்பான்மைதான். ஒரு போலீஸ்காரர் என்னதான் நேர்மையாக நடந்து கொண்டாலும், என்னதான் சுவு இரக்கத்துடன் நடந்து கொண்டாலும் ஒரளவாவது மனித இம்சை செய்யாதிருப்பதற்கில்லை என்பதை உணர்ந்தார். ஜைனரான அவர் மனச்சாட்சி அவரை அந்த வேலையிலிருப்பதை ஆட்சேபித்துக் கொண்டிருந்தது. இரண்டு மூன்று மாதங்கள் கான்ஸ்டேபிளாக இருந்த பிறகு அவர் தமது வேலையை ராஜிநாமாச் செய்தார். ஆனால் அதிகாரிகள் அதை ஏற்றுக்கொள்ளாததால் வியாதியாய்ப் படுத்துவிட்டார். பிறகு அவரது உடல்நலம் மோசமாகிப் போய் விடவே, அவர் வேலைக்கு லாயக்கற்றவரென்று அவரது ராஜிநாமாவை ஏற்றுக்கொண்டார்கள்.

சக்கரவர்த்தி வியாதியாய்ப் படுத்திருந்தபோது அவரது மனம் வேதாந்த விசாரணை செய்வதிலேயே ஈடுபட்டிருந்தது. அவருக்குப் பெற்றோர்கள் இல்லை. ஒரே ஒரு தங்கைதான். மாதவியும் அவரும் அவரது சிறிய தந்தையுடன் வசித்து வந்தார்கள். உடல் நலமில்லாதிருந்தபோது தமது மதத்தைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்த சக்கரவர்த்தி குணமானதும் ஒரு துறவியாகி விட்டார். அவரது தங்கைக்கு அப்போது வயது சுமார் இருபது இருக்கும். இன்னும் திருமணம் ஆகவில்லை. சுவாமி சகஜானந்தராய்ப் பரிணமித்திருந்த தனது தமையனை அவள் இரண்டு மூன்று முறை மகாபலிபுரம் மடத்தில் போய்ப் பார்த்து வந்தாள். அதற்குப் பிறகு அவர்களுக்குள் தொடர்பு இல்லாமற் போய்விட்டது.

— சம்பத் —

நாலிரு வருடங்களுக்குப் பின்னர் இப்போது தமது உடன் பிறந்தவளின் உயிரற்ற சடலத்தைப் பார்த்துக் கதறி அழுதார். அவரது பழைய நண்பரும் இப்போது போலீஸ் சப்-இன்ஸ்பெக்டருமாக இருந்த சிங்காரம்தான் ஈமச்சடங்குகளுக்கான ஏற்பாடுகள் எல்லாம் செய்திருந்தார். மாதவி தான் உயிர் நீத்த தினம் அவர் வீட்டுக்கு வந்துதான் தங்கி யிருந்தாள். அவர்தான் சகஜானந்தருக்குத் தந்தியடித்தது.

தம் தங்கையைப் பற்றிய விஷயங்களெல்லாம் சாமியாருக்குத் தெரிய வந்தன. மாதவி தன் சிற்றன்னையின் கொடுமையைப் பொறுக்க முடியாமல் வீட்டை விட்டு வெளியேறி விட்டாள். அவள் நல்ல உடல் அமைப்புடனும், ஓரளவு வசீகரத் தோற்றமுள்ளவளாகவும் இருப்பாள். அவள் ராயப்பன் என்ற ஒரு தூர்த்தனது வலையில் வீழ்ந்தாள். அவன் அவளுக்கு ஒரு வைத்தியசாலையில் தாதி வேலை செய்து வைப்பதாக ஆசை காட்டினான். அவளைத் தான் மணஞ் செய்து கொள்வதாகச் சத்தியம் செய்து கொடுத்தான். ஆனால் பிறகு அவள் அவனது ஆசை நாயகியாகவே காலம் கழித்தாக வேண்டி வந்தது.

ராயப்பன் ஒரு பெரிய போக்கிரி. கொலை செய்வதற்கும் அஞ்சாத முரடன். அவன் கோடம்பாக்கத்தில் கள்ளச் சாராயம் விற்பனை செய்வதில் மும்முரமாக ஈடுபட்டான். சில லட்சாதிபதிகளும், பெரிய மனிதர்களும் தங்கள் மதுபான வேட்கையைத் தீர்த்துக் கொள்ள அவன் தயவை நாடினர். நாளடைவில் ராயப்பன் செல்வந்தனாகி வந்துகொண்டிருந்தபோது மாதவியை வீட்டை விட்டு வெளியே துரத்தி விட்டான். இதற்குப் பிறகு மாதவி சில மாத காலம் எவ்வெப்படியோ காலம் கழித்து வந்தாள்; இறுதியில் வியாதியாய்ப் படுத்தாள்; அப்போது தான் அவள் சிங்காரத்தின் வீட்டுக்கு வந்தது. அவருக்கு அவளைத் தம் வீட்டுக்குள் காலடி எடுத்து வைக்கவிட இஷ்டமில்லா விட்டாலும் தம் பழைய நண்பனை உத்தேசித்து அப்படிச் செய்தார். அவர் அவளைப் பற்றிச் சகஜானந்தருக்கு விவரமாக எழுத வேண்டும் என்றிருந்தார். ஆனால் மாதவி அவர் வீட்டுக்கு வந்த தினத்தன்றே இறந்து போய் விட்டாள்.

''அவள் ஒரே ஒரு சிறிய தகரப் பெட்டி கொண்டு வந்திருந்தாள்'' என்று சிங்காரம் கூறிக் கொண்டே சென்று அந்தப் பெட்டியை எடுத்துக் கொண்டு வந்தார்:

அதன் பூட்டுத் துவாரத்திலேயே செருகி



வைக்கப்பட்டிருந்த சாவியால், சகஜானந்தர் பெட்டியைத் திறந்தார். உள்ளே சில துணிமணிகள் இருந்தன. ஒரு பழைய தோல் மணிபர்ஸும், ஒரு சிறிய நோட்டுப் புத்தகமும் இருந்தன. மணிபர்ஸில் சில்லறை நாணயங்கள் இருந்தன. நோட்டுப் புத்தகத்தின் நடுவே வைக்கப்பட்டிருந்த ஒரு புகைப்படத்தைப் பார்த்ததும் அந்தச் சந்நியாசி தேம்பித் தேம்பி அழுதார். அது அவரும் மாதவியும் சிறுவர்களா யிருந்த போது எடுத்த படம்.

''நான் பெரிய கொலைகாரன். நான்தான் அவளைக் கொன்று விட்டேன்'' என்று புலம்பினார் சகஜானந்தர்.

''நீ கொல்லவாவது?'' என்று நண்பர் கேட்டார்.

''ஆமாம்! நான் துறவறம் மேற்கொள்ளா திருந்தால் அவளுக்குக் கலியாணம் செய்து வைக்க முயற்சி செய்திருப்பேன். அப்போது அவளுக்கு இந்தக் கதி நேர்ந்திராதல்லவா?''

''இருக்கலாம். அப்போதும் ராயப்பன் போன்றவர்களிடம் தப்பித் தவறிச் சிக்கிக் கொண்டால் இந்த நிலைதான் ஏற்படும். அவன் மாதவி போன்ற எத்தனையோ அபலைகளின் வாழ்க்கையைப் பாழ்படுத்தி யிருக்கிறான்'' என்றார் சிங்காரம்.

தம் தங்கை வைத்திருந்த நோட்டுப் புத்தகத்தைப் புரட்டிப் பார்த்துக் கொண்டேயிருந்த சகஜானந்தர் சிறிது மௌனம் சாதித்தார். பிறகு, ''அந்த ராயப்பனைப் பற்றிய சில ரகசியமான தகவல்கள் கிடைத்திருக்கின்றன என்று வைத்துக்கொள். அது எழுதி வைக்கப்பட்டிருக்கிறது என்று வைத்துக் கொள். போலீஸ் அவன்மீது நடவடிக்கை எடுத்துக் கொள்ளுமா?'' என்று கேட்டார்.

''அந்த மாதிரி விவரங்கள் ஏதாவது நோட்டில் எழுதியிருக்கிறதா?''

''இருந்தால் நடவடிக்கை எடுக்க முடியுமா ? அதை முதலில் சொல்.''

''இருந்தால் அதை முதலில் நீ போலீஸில் கொடுத்துவிட வேண்டும்.''

''கொடுத்தால் என்ன நடக்கும்?'' என்று துறவி விசாரித்தார்.

''போலீஸ்காரர்கள் அதில் கண்டுள்ள நபர்களை விசாரிப்பார்கள். குறிப்பிடப்பட்டுள்ள இடங்களைச் சோதனை போடுவார்கள். போதுமான சாட்சியம் கிடைத்தால் சம்பந்தப்பட்டவர்களைக் கைது செய்வார்கள்'' என்றார் போலீஸ் உத்தியோகஸ்தர்.

''கைது செய்யப்பட்ட பிறகு...?''

''விசாரணை நடக்கும். நோட்டிலுள்ள குறிப்புகள் சாட்சியமாக எடுத்துக் கொள்ளப் படும்....''

''என்ன தண்டனை விதிக்கப்படும்?''

''அவர்கள் குற்றவாளியா யிருந்து, குற்றமும் நிரூபிக்கப்பட்டால் மாஜிஸ்டிரேட் தண்டனை விதிப்பார். இதெல்லாம் உனக்குத் தெரியாத விஷயங்களா? நீயும் ஒரு போலீஸ்காரனு யிருந்தவன்தானே?''




''ஆம்மாம்! என்ன தண்டனை விதிப்பார்?''

''அது குற்றம் நிரூபிக்கப்படுவதையும், நீதிபதியின் மனப்போக்கையும் பொறுத்தது. சில மாதங்களிலிருந்து சில வருஷங்கள் வரை சிறைவாசத் தண்டனை விதிக்கலாம்.''

''ஆனால் அந்தத் தண்டனை போதாதே. ராயப்பனும் ஒரு வாலிபன். சிறையிலிருந்து வெளி வந்ததும் மறுபடியும் கள்ளச் சாராயம் விற்கவும், பெண்களைக் கெடுப்பதிலும்தானே ஈடுபடுவான்? ராயப்பனைப் போன்ற பாதகர்களுக்கு மரண தண்டனையல்லவா விதித்தாக வேண்டும்?''

இதைக் கேட்டுச் சிங்காரம் திகைத்துப் போனார். ''நீயா? அஹிம்சா தர்மக் கொள்கை என்று சொல்லிக் கொண்டு போலீஸ் வேலையை விட்டுப் போன சக்கரவர்த்தியான நீயா இப்படிச் சொல்கிறாய் ? அந்தக் கேடி செய்யும் காரியங்களுக்குச் சட்டம் மரண தண்டனை விதிக்கவில்லையே?'' என்றார்.

''சிங்காரம்! ராயப்பன் இ...ற.....ந்....தா....க... வேண்டும். நான் அவனை உயிருடன் இருக்க விடக் கூடாது என்று தீர்மானித்து விட்டேன்.''

இதைக் கேட்ட போது சிங்காரத்துக்குத் தூக்கி வாரிப் போட்டது. ''ஏய்! பைத்தியக்காரத்தனமாக ஏதாவது செய்து வைக்கப் போகிறாய்? தவிர அந்த ராயப்பன் பெரிய முரடன். நீ அவனை என்ன செய்ய முடியும்?''

''எனக்குத் தெரியாதா சிங்காரம்! நான் மடத்துக்குப் போய் விட்டு நாளை வருகிறேன்'' என்று சகஜானந்தர் கூறி விட்டுத் தம் தங்கை வைத்திருந்த நோட்டுப் புத்தகத்தை எடுத்துக் கொண்டு புறப்பட்டார்.

தமக்கு மிகவும் பிரியமான சிஷ்யரான சுவாமி சகஜானந்தர் திரும்பி வந்ததைக் கண்டதும் பாரதி மகிழ்ச்சியுற்றார். ஆனால் சகஜானந்தர் தமது தங்கையின் வாழ்க்கை விவரங்களைப் பற்றித் தெரிவித்தபோது அவர் பெரிதும் மனவருத்தமுற்றார்.

''அந்த ராயப்பன் இறந்தாக வேண்டும்'' என்று சகஜானந்தர் அழுத்தந் திருத்தமாகக் கூறினார்.

தமது சிஷ்யன்தான் அவ்விதம் கூறுகிறான் என்று தலைவரால் நம்ப முடியவில்லை.

'' உனக்கேற்பட்டுள்ள துக்கத்தினாலும் அதிர்ச்சியினாலும் மனம் சரியாக இல்லை. ராயப்பனைக் கொல்லப் போகிறேன் என்று சொல்கிறாய்?''

''அவன் இறந்தாக வேண்டும்'' என்று சிஷ்யர் பிடிவாதமாகக் கூறினார்.

''ஏதோ மனம் பேதலித்திருப்பதனால் அப்படிச் சொல்கிறாய்.....''

''இல்லை, சுவாமி! நான் அவனை இறக்கச் செய்வதென்று தீர்மானித்து விட்டேன். நான் தெரிவித்துக் கொள்ளப் போவதற்கு என்னை மன்னிக்கணும். நான் இந்தக் கணத்திலிருந்து எனது சந்நியாச ஆசிரமத்தைக் கைவிட்டு விட்டேன். நான் இனி வெறும் சக்கரவர்த்தி'' என்று கூறியவண்ணம் பெரியவரின் காலில் விழுந்து நமஸ்கரித்து விட்டு வெளியேறினார் சகஜானந்தர்.

# அமுல் வெண்ணெய் எவ்விதத்தில் அலாதி யானது?

அது 5 மணி நேரத்தில் தயாரிக்கப்படுகிறது.

தினந்தோறும், காலையிலும் மாலையிலும், பாஸ்ச்சரைஸ் செய்யவும் வெண்ணெய் தயாரித்து, பாக் செய்யப்பட்டு வெளியனுப்புவதற்குத் தயாராவதற்கென புதுப் பால் அது சேகரிக்கப்படும் இடங்களிலிருந்து அதிவேகமாக அனுப்பப்படுகிறது.

பால் பாத்திரத்தி லிருந்து பாக்கெட் டுக்குள் செல்ல அமுலுக்கு மட்டுமே 5 மணி நேரத்திற்குள். முடிகிறது.




அமுல் வெண்ணெய் புதுமையுடனும், சுத்தமாகவும் போஷாக்கு உள்ளதாகவும் இருப்பதில் வியப்பில்லை!





கெய்ரா டிஸ்டிரிக்ட் கோ-ஆப்பரேடிவ் மில்க் ப்ரொடியூஸர்ஸ் யூனியன் லிட்., ஆனந்த்.

சக்கரவர்த்தி வெள்ளை ஆடைகள் அணிந்தவராய்க் கோடம்பாக்கம் பகுதிகளில் சுற்றி வரலானார். அவர் அங்கே பலரை விசாரித்து ராயப்பனைப் பற்றிப் பல விவரங்களைத் தெரிந்து கொண்டார். பிறகு அவனுக்கு ஒரு கடிதம் எழுதினார்.

திரு ராயப்பன் அவர்களுக்கு,

நான், தங்களுக்குத் தெரிந்தவளாயிருந்த அந்த மாதவி என்ற பெண்ணின் தமையன் என்று என்னை அறிமுகப்படுத்திக் கொள்கிறேன்.

அவள் குறிப்புகள் எழுதி வைத்திருந்த ஒரு சிறிய நோட்டுப் புத்தகம் என்னிடமிருக்கிறது. அதில் தங்கள் தொழில், தங்கள் நண்பர்கள் சிலரின் பெயர் முதலியவற்றை நிரூபிக்கக் கூடிய விவரங்கள் இருக்கின்றன. அதைப் போலீஸில் ஒப்படைக்க வேண்டியது என்னுடைய கடமையாகும். ஆனால் அப்படிச் செய்யுமுன் தங்களிடம் அதைப் பற்றிப் பேச விரும்புகிறேன். அதற்காகத் தாங்கள் என்னைச் சந்திக்க இஷ்டப்பட்டால் நான் கூறுவது போல் செய்யவும்.

நான் அடியில் குறிப்பிட்டுள்ள விலாசத்தில் தங்கி யிருக்கிறேன். தாங்கள் ஞாயிறன்று மாலை ஐந்து மணிக்கு என்னை அந்த வீட்டில் சந்திக்கவும். ஆனால் ஐந்து மணிக்குப் பிறகு வந்து சேர்ந்தால் நான் தங்களை உள்ளே வர அனுமதிக்க மாட்டேன்.

நான் அங்கே தனியாகவே இருக்கிறேன். தாங்கள் என்னைத் தாக்குவதற்காக ஏதாவது ஆயுதம் தாங்கி வந்திருக்கிறீர்கள் என்று தெரிந்தால் மேலே பேச்சு எதுவும் நடைபெறாது.

ஞாயிறன்று மாலை சரியாக ஐந்து மணிக்குத் தாங்கள் வரா விட்டால் உடனேயே போலீஸ் கமிஷனர் ஆபீசுக்குச் சென்று அதைக் கொடுத்து விடுவேன். அந்த நோட்டிலுள்ள விவரங்கள் வெளியானால் எத்தனை பெரிய கைகளுடைய பெயர்கள் பத்திரிகைகளிலும், கோர்ட்டுகளிலும் அடிபடும் என்பதை நான் சொல்லத் தேவையில்லை.



ஞாயிறு மாலை 5.00 மணிக்குச் சந்திப்பு.

சக்கரவர்த்தி.''

ராயப்பன் தனது பெயருக்கு வந்த ஒரு ரிஜிஸ்தர் கவரை உடைத்துப் பார்த்தபோது சக்கரவர்த்தி எழுதிய இந்தக் கடிதம் இருக்கக் கண்டான். அதில் குறிப்பிட்டிருந்த அந்தச் சிறிய நோட்டுப் புத்தகத்தை எப்படியும் வாங்கியாக வேண்டும் என்று தீர்மானித்து விட்டான், அது போலீஸ்காரரிடம் அகப்பட்டால் தானும், தனது கோஷ்டியாரும் மற்றும் பலரும் கைது செய்யப்படக்கூடும் என்று பயந்துதான், சக்கரவர்த்தி வற்புறுத்தியபடி ஞாயிறன்று மாலை சரியாக ஐந்து மணிக்கு அவனைச் சந்திப்பதென்று தீர்மானித்து விட்டான். இது விஷயத்தை அவன் தன் நண்பர்களுக்குத் தெரிவித்துக் கலாட்டா செய்ய விரும்பவில்லை.

ராயப்பனுக்குக் கடிதம் வந்த அதே தினம், போலீஸ் இன்ஸ்பெக்டர் சிங்காரத்துக்கும், சக்கரவர்த்தியினிடமிருந்து ஒரு கடிதம் போயிருந்தது.

''எனது அருமை நண்பா! ஞாயிறன்று மாலை ஐந்தே கால் மணிக்கு என்னை அடியில் கண்ட விலாசத்தில் சந்திக்கவும். சரியாக ஐந்தேகால் மணிக்கு வந்தாக வேண்டும். மற்றவை நேரில்''

என்று எழுதி யிருந்தது.

**ஞா**யிறன்று மாலை நாலு ஐம்பத்தெட்டு இருக்கும். சக்கரவர்த்தி தங்கி யிருந்த வீட்டிலிருந்து சற்றுத் தூரத்துக்கப்பாலிருந்த சாலையில் ஒரு பெரிய மோட்டார் வண்டி வந்து நின்றது. அதிலிருந்து ஒரு பெரிய ஆள் இறங்கி வீட்டை நோக்கி வந்து கொண்டிருப்பதைச் சக்கரவர்த்தி தமது அறை ஜன்னல் வழியாகக் கவனித்தார். அவர் முகத்தில் திருப்திக் குறி ஏற்பட்டது.

கடிகாரத்தில் மணி ஐந்தடிப்பதற்கும் ராயப்பன் அறைக்குள் காலடி எடுத்து வைப்பதற்கும் சரியாக இருந்தது.

"மிஸ்டர் ராயப்பனா?" என்று சக்கரவர்த்தி கேட்டு அவனை வரவேற்றார்.

"ஆமாம். நோட்டுப் புத்தகம் எங்கே?" என்று அவன் கோபமாகக் கேட்டுத் தன் கையை நீட்டினான்.

"இங்கே இப்போது இல்லை. அதைப் பத்திரமாக ஓரிடத்தில் வைத்திருக்கிறேன்" என்றார் சக்கரவர்த்தி.



முதல் சிநேகிதி: என்ன சாந்தி! நம் பக்கத்தில் இருந்தவர்கள் படம் நன்றாக இருப்பதாகப் பேசிக் கொண்டார்கள் பார்த்தாயா!...

இரண்டாவது சிநேகிதி: அப்படியா சொன்னார்கள்....அப்படியானால் இன்னும் ஒரு தரம் பார்க்கலாம்...!

"உனக்கு என்ன ரூபாய் வேண்டும்?"

"எனக்கா?" என்று சக்கரவர்த்தி கேட்டுப் பலத்த யோசனையில் ஆழ்ந்தார்.

"எனக்குப் பணம் தேவை இல்லை. நான் ஒரு சமயம் சந்நியாசியாகக்கூட இருந்தேன்."

"நான் உன் கதையைக் கேட்க வரவில்லை. எங்கே அந்த நோட்டு?"

"அவசரப்படாதே! பணம் என்றாயே? எத்தனை?"

"ஐயாயிரம்!"

சக்கரவர்த்தி பதிலளிக்கவில்லை.

"ஆறாயிரம் வைத்துக் கொள்!"

சக்கரவர்த்தியின் உதடுகளில் புன்னகை அரும்பியது.

"ஏழாயிரம்!"

சக்கரவர்த்தி தலையை யாட்டிய வண்ணம் கடிகாரத்தைக் கவனித்தார். மணி 5.10 ஆகிக் கொண்டிருந்தது.

"பத்தாயிரத்துக்கு மேல் ஒரு தம்பிடி கொடுக்க மாட்டேன்."

சக்கரவர்த்தியும் தாம் உட்கார்ந்திருந்த பெஞ்சியை விட்டு எழுந்து "பத்தாயிரம், ஐம்பதினாயிரம், லட்சம்" என்று மெதுவாகச் சொல்லிக் கொண்டே யோசனை செய்த வண்ணம் அங்குமிங்கும் நடந்தார். அப்போது அவரது கண்கள் ஜன்னலுக்கு வெளியே நோக்கின. அவரது நண்பர் சிங்காரம் வந்து கொண்டிருந்தார்.




"நான்தான் துறவி என்று சொல்லி விட்டேனே. எனக்குப் பணமே தேவையில்லை. நான் என் கடமையைச் செய்ய வேண்டும். நான் அந்த நோட்டுப் புத்தகத்தைப் போலீசில் ஒப்படைக்கப் போகிறேன்."

"உன்னைக் கொன்று விடுவேன்."

"கொல்லு. அப்படிச் செய்தாலன்றி நோட்டுப் புத்தகம் போலீஸாரிடம் போய்ச் சேர்ந்து விடும்" என்று சக்கரவர்த்தி கூறிய போது அவர் இடுப்பில் செருகியிருந்த குத்துவாள் கீழே விழுந்தது.

ராயப்பன் பாய்ந்து அதைக் கையில் எடுத்துக் கொண்டான்.

"நான் இதோ போலீசுக்குப் போகிறேன்" என்று சக்கரவர்த்தி கூறி அறையினின்றும் விரைந்து நடக்கத் தொடங்கினார்.

மறு கணம் அவர் முதுகில் ராயப்பன் கையிலிருந்த குத்துவாள் பாய்ந்தது.

அதே சமயம் போலீஸ் அதிகாரி சிங்காரம் சரியாக ஐந்தே கால் மணிக்கு உள்ளே நுழைந்தார். அவர் நீட்டிய கைத் துப்பாக்கியைக் கண்டதும் ராயப்பன் அதிர்ச்சி யடைந்து நின்றான். பின்னால் வந்த இரண்டு போலீஸ்காரர்கள் ராயப்பனைப் பிடித்துக் கைது செய்தனர்.

போலீஸ் அதிகாரி சிங்காரம் கீழே குப்புற விழுந்து கிடந்த தமது நண்பன் சக்கரவர்த்தியின் உடலைப் புரட்டினார்.

"நண்பா! ராயப்பனுக்கு மரண தண்டனை கிடைக்குமா?" என்று சக்கரவர்த்தி ஆவலுடன் கேட்டார். அவரது முதுகிலிருந்து ரத்த வெள்ளம் பெருக்கெடுத்து வெளி வந்து கொண்டிருந்ததை அவர் லட்சியம் செய்ததாகத் தோன்றவில்லை.

"கிடைக்கும்!" என்றார் சிங்காரம்.

"அவன் இனித் தப்ப முடியாதே? மரண தண்டனை கிடைக்குமா? இன்னொரு தரம் சொல்லு!" என்றார் சக்கரவர்த்தி.

"கட்டாயம் அவன் மரண தண்டனை அடைவான்!"

"நண்பா! நான் அஹிம்சா தர்மக் கொள்கைக்காரன். ஆகையால் நானே அவனைக் கொலை செய்ய முயற்சி செய்யவில்லை. நான் ஒரு போலீஸ்காரனாக இருந்தேன். குற்றவாளிக்குச் சரியான தண்டனை கிடைக்கச் செய்ய விரும்பினேன். துறவறம் பூண்டு என் தங்கையின் வாழ்க்கையைச் சீர்குலையச் செய்தேன். எனக்கும் மரண தண்டனை விதித்துக் கொண்டேன். என்னைக் கொல்லும்படி ராயப்பனைத் தூண்டினேன்......."

# வாரம் ஒரு முறைதான் இவள் கடைக்குச் செல்கிறாள் சாமான் வாங்க. காரணம், இவள் வீட்டிலுள்ள விசாலமான

# ஆல்வின் பிரஸ்ட்கோல்ட் தான்

நன்கு திட்டமிட்டு அமைக்கப்பட்டுள்ள உட்புறத்தைக் கொண்டதும், நிறைய சாமான்களைக் கொள்ளும் இடத்தை உடையதுமான ரெப்ரிஜிரேடர் இது. ஒரு வாரத்திற்குத் தேவைப்படும் காய்கறிகளையும் மற்ற சாமான்களையும் ஆல்வின் பிரஸ்டகோல்டினுள் நிச்சயமாக வைத்துக்கொள்ளலாம். இத்துடன் மீதமான சாப்பாட்டுப் பொருள்களை வைத்துக்கொள்ளவும் இடம் நிறைய இருக்கிறது இதனுள்.

**விலை ரூ. 1,500 ( எக்ஸைஸ் டூட்டி மற்றும் வரிகள் தனி. )**

உணவுப் பொருள்கள் வைக்கும் இடத்தின் அளவு 7.5 கிலோ கிராம் – உறையும் பனிக்கட்டியின் அளவு 1.36 கிலோ கிராம் – 2 அலுமினியம் ஐஸ் க்யூப் தட்டுகள் – பெரிய குளிர்ச்சித் தட்டு (சில் ட்ரே) – 3 விசாலமான அலுமினிய அறைகள் – கண்ணாடி மூடியுடன் கூடிய கிரிஸ்பேடர் – 6 முட்டைகள் வைத்துக்கொள்ளும் அறை – வெண்ணெய் வைக்க ஒரு அறை – கதவு உள்ள அறைகள் 2 – தானாகவே எரியும் விளக்கு.



**ஹைதராபாத் ஆல்வின் மெடல் ஒர்க்ஸ்** சனத்நகர், ஹைதராபாத்

---

பலவித ஆல்வின் ரெப்ரிஜிரேடர் மாடல்களைக் கீழ்க்கண்ட இடங்களில் பார்வையிட உங்கள் வருகையை எதிர்நோக்குகிறோம்.

பம்பாய் ஆபீஸ் : **ஆக்ரா ரோடு, பாண்டுப், பம்பாய் -78**

ஷோரூம்கள் :

**15/1, ஆஸப் அலி ரோடு, புது டில்லி**
**பெங்கால் ஸ்டோர்ஸ், 8-A, சௌரங்கி பிளேஸ், கல்கத்தா**
**150 – A, லெக்ராஜ் மான்ஷன், மவுண்ட் ரோடு, சென்னை**
**216, கன்பவுண்ட்ரி, ஹைதராபாத்**

# அலங்காரக் கலை

அனுசுயா

'இதோ ஒரு நிமிஷத்தில் வந்து விடுகிறேன்', 'இதோ ஒரு நிமிஷத்தில் சமையலாகி விடும்' என்று நாம் சொல்வது சர்வ சாதாரணம். ஆனால், இப்படிச் சொல்லும் போது நிமிஷம் என்பதன் கணக்கே அலாதி. 'ஒரு நிமிஷத்துக்கு அறுபது விநாடிகள்' என்று வாய்பாட்டில் போட்டிருக்கிறது. நாம் சொல்லும் அந்த ஒரு நிமிஷத்துக்கோ கிட்டத்தட்ட ஆயிரம், ஆயிரத்தைந்நூறு விநாடிகள் என்று வைத்துக் கொள்ளலாம்.

சீக்கிரம் சமையல் செய்வதென்னவோ இப்போது சாத்தியமான காரியந்தான். சில வீடுகளில் ஒரு காஸ் அடுப்பு, ஒரு பிரஷர் குக்கர் பாத்திரம், ஒரு மின்சார விசை அடுப்பு இத்தனையும் வைத்திருக்கிறார்கள். பத்தே நிமிஷங்களில் சாதம், குழம்பு, ரசம், கறி எல்லாவற்றையும் தயார் செய்து விடலாம். சிலர் இத்தனை வசதிகளையும் வைத்துக் கொண்டும் இரவில் மத்தியானம் சமைத்ததையேகூட வைத்துச் சாப்பிடுவார்கள்.

ஆனால் என்னதான் வசதிகளிருந்தாலும் சில சமையல் வகைகளைச் சீக்கிரம் செய்து விட முடியாது; உதாரணமாகக் கோதுமை ரொட்டி, சப்பாத்தி முதலியவற்றை. பத்தாயிரம் சப்பாத்திகள் தயாரிக்க வேண்டுமானால் குறைந்தது எழுபது எண்பது பேர்கள் ஒரு நாள் முழுதும் ஓயாமல் வேலை செய்தாக வேண்டும்.

கோதுமைச் சப்பாத்திகள் செய்ய முதலில் கோதுமை மாவை மிக நன்றாகப் பிசைந்தாக வேண்டும்; பிறகு உருண்டையாக உருட்டிக் கொள்ள வேண்டும்; பிறகு இட வேண்டும்; அப்புறம் சூடேறிய தோசைக் கல்லில் போட வேண்டும். கடைசியாக அனலில் போட்டு வாட்ட வேண்டும்.



இத்தனை காரியங்களையும் தானே செய்யக் கூடிய இயந்திரங்களை அமெரிக்கர்கள் கண்டு பிடித்திருக்கிறார்கள். இவற்றில் ஒரே ஒரு மணி நேரத்தில் பத்தாயிரம் சப்பாத்திகளைத் தயாரித்து விட முடியுமாம். இந்த இயந்திரங்களைப் பஞ்சாப் ராஜ்ய சர்க்கார் தருவிக்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

இது போன்ற சில பிரத்தியேகச் சமையல் இயந்திரங்கள் நமக்குக் கூடத்தான் தேவை. அப்பளம் இடுவதற்கு ஒன்று, முறுக்கு சுற்றுவதற்கு ஒன்று, கொழுக்கட்டை பண்ணுவதற்கு ஒன்று. நூற்றுக்கு நூறு அசல் தமிழ்ப் பட்சணங்கள், அல்லது பணியாரங்கள். (சிலர் அப்பளத்தை 'டிபனு'க்குப் பிறகு நொறுக்காகத் தின்னவும் உபயோகிப்பதால் அதையும் பட்சண ஜாபிதாவில் சேர்த்திருக்கிறேன்!) இவை நம் எல்லோருக்கும் மிகவும் பிடித்தவை. ஆனால் இவற்றைப் பண்ணலாம் என்று நினைப்பதற்கே பலர் பயப்படுவார்கள். ஏனென்றால், அவ்வளவு சிரமம் இருக்கிறது. இந்த இயந்திரங்கள் மிகவும் சீக்கிரமே கண்டு பிடிக்கப்பட வேண்டுமென்றும், கண்டு பிடிக்கப்பட்டால் பிள்ளையாருக்கு ஒரே நிமிஷத்தில் கொழுக்கட்டை செய்து நைவேத்தியம் செய்வதாகவும் வேண்டிக் கொள்வோம்.

ஆமாம்! சமையலறை வேலையைக் கால் மணி, அரை மணி நேரத்தில் முடித்துக் கொண்டு விட்டால், ஒரு நாளில் பாக்கிப் பொழுதை என்ன செய்வது? அது நம்மிடம் அகப்பட்டுக் கொண்டு சித்திரவதைப்படுமே!

ஜப்பானிய ஸ்திரீகள் பொழுதை வீண் போக்குவதில்லை. பயனுள்ள காரியமாக ஏதாவது செய்து கொண்டிருப்பார்கள். அத்துடன் அவர்கள் கலையுணர்ச்சி யுள்ளவர்கள். எதையும், அழகாக நிரக்கச் செய்து காண்பிப்பார்கள். புஷ்பங்களை வீட்டில் அழகாகச் சேர்த்து அலங்காரமாக வைப்பதை ஒரு கலையாகவே பயின்று வருகிறார்கள்.

இதற்காக ஜப்பானியத் தலைநகரான டோக்கியோவில் ஒரு பள்ளிக்கூடமே இருக்கிறது. அந்தப் பள்ளிக்கூடத்தைச் சேர்ந்த புரொபஸர் மிஸ் ஒக்குயாமா என்ற பெண்மணி சென்ற வாரம் சென்னைக்கு வந்திருந்தார். புஷ்பங்களைச் சேர்த்து வைக்கும் புஷ்பக் கொத்து அலங்காரக் காட்சி ஒன்று நடைபெற்றது.

தங்கள் வீடுகளில் பல விதமான, பல வர்ணமுள்ள புஷ்பங்களை அழகாகச் சேர்த்து வைக்கும் வழக்கம் ஜப்பானில் எப்போதுமே உண்டு. அந்தப் பழைய வழக்கத்துக்கு 'ஜக்கிபனு' என்று பெயர். பிறகு ஐரோப்பாவிலிருந்தும் மற்றத் தேசங்களிலிருந்தும் விதம் விதமான புஷ்பங்கள் கிடைத்ததும் சேர்த்து வைக்கும் முறையே மாறிப் போய் விட்டது. இந்தப் புதிய முறைக்கு 'மோரிபனு' என்று பெயர். 'மோரிபனு' என்றால் என்னமோ என்று நினைத்துக் கொண்டிருந்தேன். அந்த ஜப்பானிய வார்த்தைக்குக் 'கூடையைநிரப்பு' என்று அர்த்தம். இன்னொரு ஏற்பாட்டுக்கு

'நாகெயிரி' என்று பெயர்.

இந்த விவரங்களை யெல்லாம் மிஸ் ஒக்கு யாமா காட்சி காண வந்தவர்களுக்கு எடுத்துக் கூறினர்.

புஷ்பங்கள் என்றால் புஷ்பங்களை மட்டுமே உபயோகிக்க வில்லை. கூடச் செடிகொடிகள், இலைகள் முதலியவற்றை யும் உபயோகிக்கிறார். புஷ்பங்கள் வைக்கப் படும் பாத்திரங்கள் பல உருவுள்ளவை. பெட்டி, படகு, மேஜை, டிரே, குழாய் இப்படிப் பல விதம். அவை பீங்கான், கண்ணாடி, மரம், பிளாஸ்டிக், மூங்கில் முதலிய வற்றால் செய்யப்பட்டவை. ஜப்பான் தேசத்து மூங்கில் பருமனாய் மேலே வழவழவென்று இருக்கிறது.



பூக் கண்காட்சியில் ஒக்குயாமா விவரிக்கிறார்.

விருட்சிப் பூ, தென்னம் ஓலை, பூக்கன்லா பூ முதலியன ஓர் அலங்காரக் கொத்து. பாக்கு மட்டையும், அரளிப் பூவும் சேர்ந்து ஓர் அலங்காரக் கொத்து.

மண்ணாலான பலகை மீது செவ்விளநீர் குரும்பைக் கொத்து நீளமாக வைக்கப்பட்டிருந்தது. ஒரு சூரிய காந்தி, தென்னையின் வெள்ளை வெளேர் என்றிருந்த இளம் பாளை பிளந்து வைக்கப்பட்டிருந்தது. நமது ஊர்களில் இதை வீடுகளில் வைக்க மாட்டார்கள். ஜப்பானில் தென்னை, பாக்கு முதலியன பயிராவதில்லை யல்லவா? மிஸ் ஒக்குயாமாவுக்குத் தென்னை பாக்கு மர சம்பந்தப்பட்டதெல்லாம் மிகவும் அழகானவையாகத் தோன்றியிருக்கின்றன.

இந்தப் பூக்கொத்து அலங்காரக் காட்சியைக் காண ஜனங்கள் அரை பர்லாங் நீள முள்ள 'க்யூ' வரிசையில் நின்றுகொண்டிருந்து வந்து பார்த்து விட்டுப் போனார்கள். சில ஸ்திரீகள் பேராசிரியை கூறியதை யெல்லாம் குறித்துக் கொண்டார்கள்.

கண் காட்சியைப் பார்த்தால் 'இதென்ன பிரமாதம்?' என்று தோன்றும். உண்மையில் பிரமாதமில்லைதான். ஆனால் ஜப்பானியர்கள் போல் நாம் இது போன்ற விஷயங்களில் அதிகக் கவனம் செலுத்துவதில்லை. இங்கே பெரிய பங்களாக்களில் வசிப்பவர்கள்தான் வீட்டுக்குள் பூக்கொத்து அலங்காரம் செய்ய வேண்டுமென்று நினைக்கிறோம். ஜப்பான் போன்ற தேசங்களில் வீடுகள் என்றிருந்தால் அதைப் பூக்கொத்து அலங்கரிக்காமல் இராது.

இந்தக் காட்சி இந்தோ — ஜப்பானிய கலாசாரத் தொடர்பு சங்கத்தாரால் ஏற்பாடு செய்யப்பட்டது. பூக்கொத்து அலங்காரம் கலாசாரத்தை வளர்க்கு மென்றால், நாம் ஜப்பானுக்கு மாவால் கோலம் போடும் ஒரு பெண்மணியை அனுப்பி வைக்க ஏற்பாடு செய்யலாமே?

ஃ ஃ ஃ

கோலம் என்னும்போது ஒரு விஷயம் ஞாபகத்துக்கு வருகிறது. கோலம் போட்டால் அதை எறும்புகள் தின்னும், அதனால் புண்ணியம் ஏற்படும் என்று நியவாதிகள் சங்கத்தைச் சேர்ந்தவர்களோ, வேறு யாரோ தத்துவார்த்தம் சொன்னார்கள். ஆனால் பிறகு எறும்புகளைப் போக்குவதற்காக டி. டி. டி.யோ அது மாதிரி வேறு ஏதாவதோ உபயோகிக்க வேண்டியிருக்கிறது.

நாம் இப்போது கோல மாவுக்கு அரிசி மாவை உபயோகிப்பதில்லை. 'மொக்குமா' என்பதை உபயோகிக்கிறோம். 'மொக்கு' என்ற தெலுங்கு வார்த்தைக்குக் 'கோலம்' என்று அர்த்தம். சுத்தமான சுண்ணாம்புக் கல்லையும், மண்ணையும் சேர்த்து அரைத்து அதைத் தயாரிக்கிறார்கள்.

சில தினங்கள் முன்னால் ஒரு வீட்டு வாசற் பக்கம் நின்று கொண்டிருந்த போது அந்த வீட்டுப் பெண், "அம்மா! அம்மா! நான்தான் கோலம் போடப் போகிறேன்" என்று கூறி வீட்டுக்குள் ஓடினாள். கையில் ஒரு ஜாமெட்ரி பாக்ஸை எடுத்துக் கொண்டு வந்தாள். ஸ்கேலால் அளந்து கோலம் போடப் போகிறாளாக்கும் என்று நினைத்தேன். அவள் அந்தப் பெட்டியைத் திறந்து ஒரு சாக்கட்டியை எடுத்து அதனால் கோலம் போட்டாள். மாவைக் கரைத்து இழை கோலம் போடுகிறோமே அதுமாதிரி இருந்தது. ஆனால் கீழே தரை - சிமெண்ட் தரை. தண்ணீர் தெளித்துத் துடைக்கப்பட்டிருந்தது.

மார்கழி மாதங்களில் வீட்டு வாயில்களில் அழகழகான கோலங்கள் போட்டு அவற்றைப் பல நிறப் பூக்களால் அலங்கரிக்கும் கலைதான் நம் நாட்டிலே தொன்றுதொட்டுப் பழக்கத்தில் இருந்து வருகிறதே!







1. ஆக்ராவில் பாரதப் பிரதமர் இந்திய க்ஷயரோக நிலையத்துக்கு அஸ்திவாரக் கல் இட்டார். 2. கல்கத்தா தமிழ் எழுத்தாளர் சங்கம் ஸ்ரீ டி. எஸ். சீதாபதி பம்பாய் செல்வதையொட்டி நடைபெற்ற வழி யனுப்பு உபசாரம். 3. கிண்டி இன்ஜினியரிங் கல்லூரி பழைய மாணவர் சங்கத்தில் ஸ்காலர்ஷிப் நிதி உதவிக்காக டி. கே. எஸ். சகோதரர்களின் சிவகாமியின் சபதம் நாடகம் நடைபெற்றது. நாடகத்துக்குத் தொழில் மந்திரி தலைமை வகித்தார். 4. கல்கத்தாவில் நடைபெற்ற பாரதியார் விழாவை சி. சுப்ரமண்யம் அவர்கள் தொடங்கி வைத்தார். 5. சன்லைட் சோப்பின் எழுபத்தைந்தாவது பிறந்த தினத்தை ஹிந்துஸ்தான் லீவர் ஸ்தாபனத்தார் சிறப்பாகக் கொண்டாடினர். 6. கு. அழகிரிசாமி 'கவிச் சக்கரவர்த்தி' நூல் வெளியீட்டு விழா பம்பாய் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் நடைபெற்றது.












“எங்கள் பங்களாவில் பூட்டிக் கிடக்கும் ராணி மஹாலுக்குள் நடு ராத்திரியில் வீணை சப்தம் கேட்பதாக என் தாத்தா அடிக்கடி தூக்கத்தில் பிதற்றிக் கொண்டு அலறியடித்துக் கொண்டு எழுந்து விடுவார். இதைப் பற்றி நான் எங்கள் பட்லர் இருதயசாமியிடம் விசாரித்தேன். நான் குழந்தையாக இருக்கும் போது என்னை என் அம்மாவிடமிருந்து தூக்கி வந்து என் தாத்தாவிடம் கொடுத்தவன் அவன்தான்! என் அம்மாவுக்கும் அப்பாவுக்கும் வீணை வாசிப்பதென்றால் உயிராம்! இருதயசாமி ரகசியமாக என்னிடம் சொன்னான். அதிலிருந்து வீணை வாசிப்பதில் நானும் மேதையாக வேண்டுமென்று ஆசைப்பட்டேன்!'' என்று பிச்சுமணி ஒரு பெருமூச்சுடன் சொல்லி விட்டு வீணையை வாங்கிக்கொண்டு தரையில் உட்கார்ந்து அதை மீட்டி வாசிக்கலானான். அதியற்புதமாக வீணாகானம் புரிவது அவனுக்கு வரப் பிரசாதம் போல் அமைந்திருந்தது. அந்தச் சம்பூர்ணமான கலை ஞானம் தாய் வழிச் சொத்தாக அவனுக்கு அமைந்திருந்ததோ என்னவோ; அந்த ஞான வசத்தால் தன் இன்னிசையின் சுருதியிலேயே இழைந்து தன்னை மறந்து தன் ஆத்மா முழுவதையும் தன் கைவிரல்களின் வழியாக வீணையின் தந்திகளிலே பெய்து அதிமோகனமாகக் கீதம் எழுப்பிக் கொண்டேயிருந்தான்.

அந்த வீணாகானத்தைக் கேட்டவர்களெல்லாம் மந்திர சக்தியால் கட்டுண்டவர் போல் அதன் நாத வெள்ளத்திலே கரைந்து மனம் ஒன்றிப் போனார்கள். விளையாட்டுத்தனமான குழந்தைகள்கூட அசைவற்று நின்றன. வசந்தி வாயடைத்துப் போய் அளவு கடந்த வியப்புடன் வீணையின் தந்திகளில் நர்த்தனமிடும் பிச்சுமணியின் விரல்கள் மீதே தன் விழிகளை ஓட விட்டுக் கொண்டிருந்தாள்.

கட்டிலில் அசைவற்றுப் படுத்திருந்த உமாவின் கண்கள் அலாதியாக மின்னின. இது போன்ற வீணையின் இன்னிசையை இதற்கு முன் அவள் தன் காதால் கேட்டதுமில்லை, அவளே வாசித்ததுமில்லை. பிச்சுமணியின் இன்னிசை அவளுடைய அந்தராத்மாவை யெல்லாம் கிளர்ந்தெழச் செய்தது. பிச்சுமணியோ அதற்காகவே அப்படி வாசிப்பது போல் தோன்றியது. அவன் வீணையின் நரம்புகள் ஒவ்வொன்றையும் மீட்டும் போதும்



என்றெல்லாம் சொல்வார்களே, அது போன்றதொரு சக்தியால் கட்டுண்ட உமா பிரமையில் ஆழ்ந்திருந்தாள்.

அப்போது திடீரென்று வீணையின் தந்தி அறுவது போல் டாக்டர் ஜகந்நாதன் அந்த அறைக்குள் திடும்பிரவேசமாகி, "இதென்ன ஆஸ்பத்திரியா? சங்கீத மேடையா?" என்று கத்திக் கொண்டே வந்து நின்றார்.

பிச்சுமணி தன் வீணை வாசிப்பை நிறுத்திவிட்டு ஆத்திரத்தோடு அவரை ஏறிட்டுப் பார்த்தான்.

வசந்திக்கு ஜகந்நாதன் மீது கோபம் கோபமாக வந்தது. அவள் துள்ளி வந்து அவர் முன் நின்று, "டாக்டர் ஸார்! வீணை வாசித்தால் அக்காவுக்குத் தெம்பாய் இருக்கும் என்று நீங்கள்தான் சொன்னீர்களாம்" என்று சீறினாள்.

"அதற்காக என் நர்ஸிங் ஹோமைப் பிச்சுமணி தன் சங்கீத சபாவாக மாற்றச் சொல்லவில்லையே" என்றார் ஜகந்நாதன் அலட்சியமாக.

"சார்! 'மியூஸிக் க்யூர்' (சங்கீதச் சிகிச்சை) என்று நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்கள் இல்லையா?" என்று வசந்தி மீண்டும் படபடத்தாள்.

"ஓ! சங்கீதமே நோயாளிக்குச் சிகிச்சை அளிக்க ஆரம்பித்து விட்டால் அப்புறம் டாக்டர்களுக்கு என்ன வேலை? எங்களுக்குக் கிடைக்க வேண்டிய பீசையெல்லாம் சங்கீத வித்வான்களல்லவா கறந்து கொண்டு போய்விடுவார்கள்!" என்று கிண்டலாகச் சொன்ன ஜகந்நாதன் சட்டென்று பிச்சுமணியின் பக்கம் திரும்பி, அவன் கையிலிருந்து வீணையை வெடுக்கென்று பிடுங்கி அதைக் கீழே போட்டுடைக்கத் துடிப்பவர் போல் உயரத் தூக்கிப் பிடித்தார்.

அதைப் பார்த்ததும் உமா பதறியடித்துக் கொண்டு வீணையைக் காப்பாற்ற முயல்வாள் என்று எதிர்பார்த்தார். ஆனால் உமா தன் முகத்தைத் தன்னிரு கைகளாலும் மூடிக் கொண்டு அப்படியே செயலற்றவளாக இருந்து விட்டாள். குழந்தைகள் உள்பட மற்ற எல்லோரும் ஏதோ ஒரு யமகிங்கரனை, பரம விரோதியை ஏறிட்டுப் பார்ப்பதைப் போலவே ஜகந்நாதனை வெறித்து நோக்கினார்கள். அவருடைய போக்கு ஒரு திடீர் சித்த வெறியனின் பைத்தியக்காரச் செயல் போலவே தோன்றியது.

ஒரு கணம் அந்த இடத்தில் பயங்கர அமைதி நிலவியது!

அடுத்த கணம் வீணையை ஒருபுறம் வைத்துவிட்டு ஜகந்நாதன் வெகு அமைதியாக உமாவின் அருகில் வந்து நின்று, "உமா! உன் கால் முடமாகாமல் சங்கீத சிகிச்சையால் குணமாகி விட்டதா என்று பரீட்சித்துப் பார்க்க வேண்டும்! உன் கால் பாண்டேஜை அவிழ்ப்பதற்கு நர்ஸுகளை இப்போதே அனுப்பி வைக்கிறேன். கட்டை எடுத்ததும் உன்னால் நடக்க முடியுமா பார்க்கலாம்!" என்று கூறிச் சென்றுவிட்டார்.

அவர் போன திசையையே பிச்சுமணி ஆத்திரத்தோடு வெறித்து நோக்கியபடி நின்று கொண்டிருந்தான்.

வசந்தி மெல்ல அவன் அருகில் வந்து அவனைப் பரிதாபமாகப் பார்த்தாள். அந்தப் பார்வையைப் பிச்சுமணியால் தாங்க முடியவில்லை! அவன் பற்களைக் கடித்துக் கொண்டு வசந்தியிடம் "நான் அந்த டாக்டரை வெறுக்கிறேன்! அது அவருக்கும் தெரியும்!" என்றான்.

"அவருக்குச் சரியான சூடு கொடுக்க வேண்டுமென்று எனக்கும்தான் ஆத்திரம் வருகிறது, பிச்சு!" என்று வழிமொழிந்த வசந்தி சட்டென்று ஏதோ யோசித்துவிட்டு, பிச்சுமணியின் காதருகில் எவ்வி நின்று ரகசியமான குரலில், "பிச்சு! அந்த டாக்டர் சொல்வதைப் பார்த்தால் அக்கா முன் போல் எழுந்து நடமாட முடியுமோ என்று பயமாக இருக்கிறது. அதனால் அக்காவுக்குப் பூரண குணமாகும்வரை நம் ஆத்திரத்தையெல்லாம் காட்டிக் கொள்ளாமல் டாக்டரைத் தாஜா செய்ய வேண்டுமே தவிர, அவரை முறைத்துக் கொள்ளக் கூடாது!" என்று கூறினாள்.

அதைக் கேட்டதும் பிச்சுமணியின் கால் கைகளெல்லாம் பதறின.

அத்தியாயம் இருபத்தாறு

## கற்பனையின் பயங்கரம்

உமாவின் வலது காலில் போடப்பட்டிருந்த 'பாண்டேஜ்' எடுக்கப்பட்டதும், "உமா! கொஞ்சம் காலை மடக்கி நீட்டு, பார்க்கலாம்!" என்றார் டாக்டர் ஜகந்நாதன்.

அவ்வாறு செய்ய முயன்ற உமா வலி தாங்க முடியாமல் 'வீல்' என்று கத்தினாள். காலை மடக்கவும், நீட்டவும் முடியவில்லை. சிறிது அசைத்தாலும் பிராண வேதனையால் துடித்தாள்.

நெருக்கமான நெசவு. நீடித்த உழைப்பு.
பூர்த்தியழகு எல்லாவற்றிலும்

# கோத்தாரி மல்கள்

## மேம்பட்டவை

### லாங்கிளாத்துகளுங் கூட!

...ஏனென்றால்

- கோத்தாரி மல்கள், லாங்கிளாத்துகளை தயாரிக்க பயன்படும் நூல் உயர்ந்தரகக் கோத்தாரி நூலாகும்.
- சுயமாக இயங்கும் விசைத்தறியில் நூலிழைகள் நெருக்கமாக நெய்யப்படுகின்றன.

எப்பொழுதும் கோத்தாரி மல் எம். 7 என்றும் லாங்கிளாத் எல். 1 அல்லது எல். 2 என்றும் பெயரைக் குறிப்பிட்டுக் கேளுங்கள்.

இந்த டிரேட் மார்க்கையும் கவனியுங்கள்







தயாரிப்பாளர்கள்:
**கோத்தாரி டெக்ஸ்டைல்ஸ் லிமிடெட்**

சிங்காநல்லூர், கோயமுத்தூர்.
ஸஸ்டெயினிங் மெம்பர்—
இந்தியன் ஸ்டாண்டர்ட்ஸ் இன்ஸ்டிடியூஷன்
மானேஜிங் ஏஜண்டுகள்:
**கோத்தாரி & ஸன்ஸ்**
ஓரியண்டல் பில்டிங்ஸ்,
அர்மனேக்காரத் தெரு,
சென்னை-1.

KTZ-1730A TMS.

## பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு (பிரைவேட்) லிட்.,

(நிறுவியது)

"வீணு விஹார்", 17-A, ஸயான் - மாதுங்கா எஸ்டேட்

(கிங்ஸ் ஸர்க்கிள் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில்)

Post Bag No. 6759. பம்பாய் – 22 தந்தி: "GROWRICH"

போன்: 471455

25 மாதங்கள் | **குறுகிய கால ஏலச் சீட்டுகள்** | 25 அங்கத்தினர்கள்

2-வது ஞாயிற்றுக்கிழமை ஏலங்கள்

1964 ஜனவரி மாத ஸீரிஸ்

சேரக் கடைசி தேதி 11-1-1964 ... முதல் ஏலத் தேதி 12-1-1964

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000/- | F | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | G | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | J | ரூ. 10/- | ரூ. 250/- |

### நீண்டகால ஏலச் சீட்டுகள்

சேரக் கடைசி தேதி 11-1-1964 ... முதல் ஏலத் தேதி 12-1-1964

50 மாதங்கள் 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | குறித்த தள்ளுபடி |
|---|---|---|---|
| C | ரூ. 200/- | ரூ. 10,000/- | ரூ. 1,000/- |
| A | ரூ. 100/- | ரூ. 5,000/- | ரூ. 500/- |
| B | ரூ. 50/- | ரூ. 2,500/- | ரூ. 250/- |
| D | ரூ. 20/- | ரூ. 1,000/- | ரூ. 100/- |

*விலாசம் தெளிவாக எழுதிக் கேட்டவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப் படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.*

வெள்ளிக்கிழமை (வார விடுமுறை நாள்)

வேலை நேரம்: காலை 8 முதல் 11 மணி வரை; மாலை 4 முதல் இரவு 8 மணி வரை

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

தலைமை ஆபீஸ்: மதராஸ்-5

இதர கிளைகள்:
1. 70, முதல் மாடி, 5வது மெயின் ரோடு, ஸ்ரீனிவாச பில்டிங், காந்தி நகர், பெங்களூர்-9
2. "கான்லன் ஹவுஸ்", 1/24, ஆஸப் அலி ரோடு, புது டில்லி-1
3. 4/73, கிருஷ்ணு மார்க்கெட், W. E. A., கரோல்பாக், புது டில்லி-5
4. 198, முதல் மாடி, ஜோர்பாக் நர்ஸரி, புது டெல்லி-3
5. 48, லேக் பிளேஸ், கல்கத்தா-29

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

---

பண்டிட் டி. கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்

ஆயுர்வேதாஸ்ரமம் பிரைவேட் லிட்.

மதராஸ்-17

ஜகந்நாதனே வெகு அமைதியாக, ''உமா! பல்லைக் கடித்துக் கொண்டு சட்டென்று எழுந்து நடந்தால் எல்லாம் சரியாய்ப் போய் விடும். நீ விழுந்து விடாதபடி நர்ஸுகள் உன்னைப் பத்திரமாகப் பூப்போல் பிடித்துக் கொள்வார்கள்!'' என்றார் புன்முறுவலுடன்.

எழுந்து நடப்பது என்பதை நினைத்ததுமே உமாவுக்கு அளவில்லாத பீதி உண்டாயிற்று. நடப்பதால் காலில் ஏற்படக் கூடிய வலி கற்பனையில் சகிக்கவே முடியாத நரக வேதனையாகத் தோன்றியது. இரண்டு இளம் நர்ஸ்கள் அவளைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு கட்டிலிலிருந்து அவளைத் தூக்கிவிட முயன்றார்கள். அப்போது உமாவின் வலது கால் சிறிது அசைந்து அதில் வலியெடுப்பதை உணர்ந்ததுமே, அவள் 'வீல்' என்று பலமாகக் கத்தினாள். இப்போது அவளுக்கு மூர்ச்சையே போட்டு விடும் போலிருந்தது.

''வேண்டாம், டாக்டர்!'' என்று கத்திய உமா பதறும் குரலில் ஜகந்நாதனை நோக்கி, ''என்னைத் தூக்க வேண்டாம், சார்! நர்ஸுகளை விட்டு விடச் சொல்லுங்கள், சார்! நான் படுத்தேயிருக்கிறேன்! என்னால் எழுந்திருக்க முடியாது! காலை ஊன்ற முடியாது!'' என்று கையெடுத்துக் கும்பிடாத குறையாய்ப் பரிதாபமாகக் கெஞ்சினாள்.

''அப்படியானால் உமா, நீ காலம் முழுவதுமே கட்டிலிலேயே கழித்துவிட முடியுமா?'' என்று ஜகந்நாதன் சற்றுப் பயமுறுத்தலாகவே கேட்டார்.

''நான் என்ன செய்வேன், டாக்டர்? காலை ஊன்றி நிற்பதை நினைத்தாலே எனக்குப் பயமாக இருக்கிறது! அதைவிட நான் செத்துக் கூடப் போய் விடுகிறேன்!'' என்று உமா பச்சைக் குழந்தையைப் போல் முகத்தைத் தன் இரு கைகளாலும் பொத்திக் கொண்டு விம்மினாள். அவளுடைய கரு விழிகளிலிருந்து கண்ணீர் குபுகுபு வெனக் கொட்டியது.

''உமா! முடியும் என்பதும் முடியாது என்பதும் அவரவர் மனத்தைப் பொறுத்தது! முடியாது என்று நினைத்தவர்கள் பலர் வாய்ப்பிருந்தும் ஊனமடைந்து வாழ்க்கை முழுதும் அவதிப் படுகிறார்கள். முடியும் என்று நினைத்தவர்களுக்கோ தீராத வியாதிகள்கூடத் தீர்ந்து போய் அதிசயமாகக் குணமடைந்திருக்கிறார்கள். டாக்டர் என்ற முறையில் இந்த அதிசயத்தை எத்தனையோ நோயாளிகளிடம் நான் பார்த்-



## காரோட்டுவோர் கவனிக்க!

கண்களிலிருந்து பெருகிய நீர் கன்னக் கதுப்பில் முத்திட்டு நிற்க, ''அப்பா இனிமேல் வரவே மாட்டாரா அம்மா!'' என்று தாயாரைக் கேட்கிறது ஓர் அழகிய குழந்தை. இப்படி ஒரு புகைப்படத்தைப் பத்திரிகை விளம்பரமாகப் பிரசுரித்து நெஞ்சை உருக்கினார்கள் பர்மா-ஷெல் ஸ்தாபனத்தினர் சில வாரங்களுக்கு முன்னால்.

சாலைகளில் மோட்டார் வாகனங்களை யெல்லாம் ஜாக்கிரதையாக ஓட்டிக் கொண்டு போகாததால் உயிரிழந்த பல்லாயிரக் கணக்கானோரில் அந்தக் குழந்தையின் தகப்பனாரும் ஒருவர் என்பதாகக் குறிப்பிட்டிருந்தனர் அந்த விளம்பரத்திலே.

இவ்வாறு விளம்பரம் போட்டதுடன் நில்லாமல் பள்ளிப் பிள்ளைகளுக்கென விளையாட்டுப் பூங்காக்களும் அமைக்கப் போகின்றனர். இந்தப் பூங்காக்களில் உள்ள சாலைகளில் உலவி வரும் குழந்தைகளுக்குச் சாலைகளில் நடக்கும்போதும் கார் ஓட்டும் போதும் கடைப்பிடிக்க வேண்டிய விதி முறைகளையும் விளையாட்டுப் போலவே சொல்லித் தரப் போகிறார்கள். டில்லி, மகாராஷ்டிர ராஜ்யங்களில் சர்க்கார் ஒத்துழைப்புடன் இந்த நல்ல பணி இப்போது தொடங்கியிருக்கிறது.

குழந்தைகளைக் காரில் வைத்துக் கொண்டு ஓட்டும் பெற்றோர்கள் இனி விபத்து நேரக் கூடாதே என்பதைக் காட்டிலும் தாம் செய்யும் தவறுகளைத் தங்கள் குழந்தைகள் கவனித்துக் திருத்தம் கூறிவிடப் போகிறார்களே என்பதற்காகவாவது பத்திரமாக ஓட்டுவார்கள் என்று எதிர்பார்க்கலாம்!

இருக்கிறேன்! 'அகமே புறம்' என்கிற தத்துவத்தையும் நீ கேள்விப்பட்டிருப்பாய்! மனோ சக்திதான் அபாரமான காரியங்களைச் 'சாதிப்பது மட்டுமல்ல, உடலுக்கும் ஆக்கம் தருகிறது! அந்தச் சக்திதான் உனக்கு இப்போது தேவை!'' என்றார் டாக்டர் ஜகந்நாதன் அழுத்தம் திருத்தமாக.

''இருந்தாலும் டாக்டர், காலை எடுத்து ஊன்றுவதை நினைத்தாலே...''

''உமா! நிஜத்தை விடக் கற்பனையில் நினைத்து மருள்வதுதான் அதி பயங்கரமாக இருக்கும்! உன் காலில் சிறு 'ப்ராக்சர்' தான் ஏற்பட்டது என்றாலும் இப்போது நீ எழுந்து நடக்கப் பயந்தால் அந்தப் பயமே ஊனமாகிக் கால் வழங்காமலே போய் விடும். அப்புறம் இழுத்து இழுத்து நடப்பதைவிட அந்தக் காலையே ஆபரேஷன் செய்து வெட்டி யெறிந்து விடலாம் எனப் பரிதவிப்பாய்!'' என்று ஜகந்நாதன் ஊசி குத்துவது போல் சொல்லி விட்டு, ''ஆகவே உமா, எப்படியாவது தைரியத்தை வரவழைத்துக் கொண்டு பிராணனே இழிவதுபோல் வலியெடுத்தாலும் பொறுத்துக் கொண்டு சட்டென்று காலை எடுத்து வைத்து நட !'' என்று வற்புறுத்தினார்.

வசந்தியும் பதறியவளாய்க் குறுக்கிட்டு, ''ஆமக்கா! மனத்தில் வேறு எதையாவது நினைத்துக் கொண்டு கண்ணை மூடிக் கொண்டு நடக்கா !'' என்று கூறியபடி உமாவின் முகவாயைத் தன் கைகளால் பற்றித் தன் பக்கம் வாஞ்சையுடன் திருப்பிக் கண்களில் நீர் ததும்பக் கெஞ்சினாள்.

பிச்சுமணியும் கண் கலங்கியவனாய் உமாவைப் பரிவோடு நோக்கி, ''மிஸ் உமா! கொஞ்சம் முயற்சி செய்து பாருங்களேன்! முதல்லே ஓரடி எடுத்து வைத்து விட்டால் அப்புறம் நன்றாக நடக்க வந்து விடும்! ப்ளீஸ்!'' என்று குரல் விம்மக் கெஞ்சினான்.

உமாவின் பாட்டி, சித்தி, தகப்பனார் முதலானவர்களும் நயமாகவும் பயமாகவும் எவ்வளவோ வற்புறுத்தினார்கள். உமாவிடம் டியூஷன் சொல்லிக் கொள்ளும் குழந்தைகள்கூட, ''டீச்சரக்கா! டீச்சரக்கா! கொஞ்சம் நடங்களேன், டீச்சரக்கா!'' என்று மழலை மொழியில் கெஞ்சினார்கள். ஆனால் உமாவோ கட்டிலை விட்டு எழுந்திருக்கவே பயந்தவளாய் அனைவரின்கோரிக்கையையும்மறுத்துவிட்டாள்.

ஜகந்நாதன் ஏதோ யோசித்துவிட்டு அவ்வறையை விட்டு வெளியே சென்றார்.

அவரை வசந்தி பின்தொடர்ந்து ஓடி வந்து, ''டாக்டர்! இனிமேல் என் அக்காவின் நிலை என்ன?'' என்று கவலையுடன் கேட்டாள்.

''நான் சொல்கிறபடியெல்லாம் உமா நடக்கா விட்டால் அப்புறம் அவளுடைய காலுக்கு உத்திரவாதம் அளிக்க முடியாது!''

''நீங்கள் சொல்கிறபடி யெல்லாம் என்றால்....?''

''அதெல்லாம் உனக்குப் புரியாது; வசந்தி !''

''நான் காலேஜில் படிக்கிற பெண்! எதையும் என்னால் புரிந்து கொள்ள முடியும் !'' என்றாள் வசந்தி.

''ஓ! அப்படியானால் எல்லாவற்றையும் நீயே யூகித்துக் கொள்! என் வாயால் அதை விளக்குவது நன்றாக இராது!'' என்றார் ஜகந்நாதன் அர்த்த புஷ்டியோடும் கண்களில் விபரீதப் புன்முறுவலோடும்.

அவரை வசந்தி கூர்ந்து பார்த்தாள். அவளுடைய முகம் குபீரென்று வெளுத்தது.

பிறகு அவள் ஒருவாறு தன்னைச் சமாளித்துக் கொண்டு ''டாக்டர் சார்! நீங்கள்தான் மகா மேதை என்பதில்லை. உங்களைவிட ஸ்பெஷலிஸ்டுகள், நிபுணர்கள் எல்லாம் இந்த மெட்ராஸிலேயே இருக்கிறார்கள்! அமெரிக்காவுக்குப் போக வேண்டும் என்கிற அவசியம்கூட இல்லை!'' என்று முழங்கி விட்டு வில்லிலிருந்து புறப்பட்ட அம்பு போல் விர்ரென்று வேகமாகப் பாய்ந்து சென்று, உமாவின் அறை வாசல் முன் சடாரென்று பிரேக் போடப்பட்ட கார் போல், குலுங்கி நின்றாள்.

அங்கே கவலையே உருவாக நிற்கும் அவளுடைய அப்பா அம்மா முதலானவர்களை நோக்கி அவள் பரபரப்புடன், ''அப்பா!.... அம்மா!.... அந்த டாக்டர் வாய்ப் பேச்சில்தான் வல்லாளகண்டன். இனி அவரை நம்பிப் பிரயோசனமில்லை! அக்காவை இனி ஒரு நிமிஷம்கூட இந்த நர்ஸிங் ஹோமில் வைத்திருக்கக் கூடாது. உடனே ஜெனரல் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போய்க் காட்ட வேண்டும். ராத்திரி எந்நேரமானாலும் அக்காவைக்கொண்டு போய் அங்கே 'அட்மிட்' செய்துவிட வேண்டும்!'' என்று துடிதுடித்தாள்.

''இந்த டாக்டர் வேண்டவே வேண்டாம் என்று நான் அப்போதே சொன்னேன்! மிஸ் உமா தான் கேட்கவில்லை!'' என்றான் பிச்சுமணி மனத் தாங்கலோடு.

(தொடரும்)

# புகழ்வாணனின் பெருமிதம்

பிரபல நகைச்சுவை நடிகர் புகழ்வாணன் தம் வீட்டு மேல் மாடியிலே, ஒரு மூன்று முழத் துண்டை மட்டும் இடுப்பிலே முழங் காலுக்கு மேல் உடுத்திக் கொண்டு, திறந்த மார்புடன், ஏதோ ஒரு சஞ்சிகையைப் படித்துக் கொண்டிருந்தார்.

"அப்பா! அப்பா!" என்று பரபரப்புடன் அழைத்தவாறே அவருடைய பதினாறு வயது மகள் மரகதம் மாடிப்படியே அதிரும் வண்ணம் ஏறி வந்தாள்.

"என்ன மரகதம்? என்ன விஷயம்? ஏன் இப்படிப் பரபரப்புடன் ஓடி வருகிறாய்?" என்று கேட்டார் நகைச்சுவை நடிகர் தம் மகளைப் பார்த்து.

"அப்பா! உங்களைத் தேடிக் கொண்டு, எங்கள் பள்ளித் தலைமையாசிரியர் வந்திருக்கிறார்!"

"யார்? உங்கள் தலைமையாசிரியர் அண்ணாமலை ஐயாவா?"

"ஆமாம், அப்பா!"

"என்ன விஷயமாம்?"

"அதெல்லாம் நான் என்ன அப்பா கண்டேன் ...?"

"சரி! சரி! குழந்தை, அவரை மாடிக்கு அழைத்து வா!"

மகள் தந்தையை வியப்புடன் நோக்கினாள்.

"ஏன் குழந்தை தயங்குகிறாய்? உம்! சீக்கிரம் அழைத்து வா! தலைமையாசிரியரைக் காக்க வைக்கலாகுமா?"

"அப்பா! நீங்கள் இந்த மாதிரி ஒரு சிறு துண்டைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறீர்களே! இந்தக் கோலத்துடன் அவரை வரவேற்பது நன்றாய் இருக்குமா?" என்று கூறித் தந்தையைப் பார்த்துப் பரிகாசத்துடன் நகைத்தாள் மரகதம்.

"ஓ, அதுவும் நியாயந்தான், குழந்தாய்!" என்று தம் கன்னத்தைத் தடவியபடியே சிரித்துக் கொண்டு கூறிய புகழ்வாணன், "அப்போது ஒன்று செய்கிறாயா, மரகதம்?" என்று கேட்டார்.

"என்னப்பா செய்ய வேண்டும்?" என்று துடிதுடிப்புடன் கேட்டாள் மகள் மரகதம்.

"பீரோவைத் திறந்து இன்னொரு மூன்று முழத் துண்டு கொண்டு வா!"

வியப்புடன், "இன்னொரு துண்டா! எதற்கு அப்பா?" என்று வினவினாள் மரகதம்.





"உன் தலைமையாசிரியருக்காகத் தான் குழந்தை!" என்று கூறி நகைத்தார் நகைச்சுவை நடிகர்.

"பேஷ்! பேஷ்! பிரமாதம் உங்கள் நகைச்சுவை!" என்று கூறியவாறு மாடிப்படி ஏறிவரும் தலைமையாசிரியரைக் கண்ணுற்ற புகழ்வாணன், மகிழ்ச்சிப் பெருக்குடன், "வாருங்கள், வாருங்கள்!" என்று வரவேற்றார்.

"மிஸ்டர் புகழ்வாணன்! நீங்கள் கூறிய இந்த நகைச்சுவை, எனக்குப் பிரபல மேனாட்டு எழுத்தாளர் மார்க்ட்வைனுடைய நகைச்சுவையை நினைவுபடுத்துகிறது" என்று கூறிக்கொண்டே அமர்ந்தார் தலைமையாசிரியர்.

"அப்படியா? கொஞ்சம் சொல்லுங்களேன், அந்த நகைச்சுவையைப் பற்றி!" என்று புகழ்வாணன் கேட்க, தலைமையாசிரியர் கூறினார்:

"மார்க்ட்வைன் சுகவாசி. அவர் படிப்பதும் எழுதுவதும், பெரும்பாலும் படுக்கையில் இருந்து கொண்டேதான். ஒரு நாள் அவரைப் பேட்டி காண, நிருபர் ஒருவர் அப்போது வந்தார். தம் படுக்கையில் படுத்த வண்ணம் ஏதோ படித்துக் கொண்டிருந்த மார்க்ட்வைன் தம் மனைவியிடம் 'அவரை இங்கேயே அனுப்பு!' என்று கூறினார். மனைவி, 'ஐயையே! நீங்கள் இப்படிப் படுக்கையில் படுத்தவாறு இருக்கும்போது, அவர் இங்கு வந்து உங்கள் முன்பு நிற்பது நன்றாக இருக்குமா? நாகரிகமாய்த்தான் தோன்றுமா? அவர் என்னதான் எண்ண மாட்டார்? அதைச் சற்று யோசிக்க வேண்டாமா?' என்று கூறிப் பலமாக நகைத்தாள்? சற்று நேரம் யோசனையில் ஆழ்ந்த மார்க்ட்வைன், பின்னர் கூறினார்: 'ஆம்! நீ கூறுவது நியாயந்தான். நான் ஏதோ கவனமில்லாமல் கூறி விட்டேன். சீக்கிரம் எனக்குப் பக்கத்திலே இன்னொரு படுக்கையை விரி!' என்றாராம். இதைப் போலத்தான் இருக்கிறது. உங்கள் நகைச்சுவை, மிஸ்டர் புகழ்வாணன்!"

மார்க் ட்வைனின் நகைச்சுவையை எல்லோரும் சேர்ந்து சுவைத்தார்களென்பது ஒருபுறம் இருக்கட்டும், பிரபல அமெரிக்க எழுத்தாளருடன் தம்மைத் தலைமையாசிரியர் ஒப்பிட்டுப் பேசியதில், மிக மிகப் பெருமிதம் அடைந்தார் புகழ்வாணன்! —சரவன்

பிரின்ஸிபால் சுந்தர வரதனுக்கு உணவு செல்லவில்லை; உறக்கம் கொள்ளவில்லை. பக்கத்திலிருந்த ''பராசக்தி காலேஜி''ன் பெயர் பத்திரிகைகளில் பிரமாதமாக அடிபட, தம்முடைய ''காவேரி காலேஜ்'' உயிரின்றித் தூங்கி வழிவதை எண்ணிப் பார்த்த பொழுது துக்கம் தொண்டையை அடைத்தது.

பராசக்திக் கல்லூரியில் மாதத்தில் மூன்று தடவையாவது மாணவர்கள் வேலைநிறுத்தம் செய்து ஊர் இரண்டுபட ஆர்ப்பாட்டம் செய்வார்கள். வருஷத்தில் சராசரி இரண்டு மாணவர்களாவது மாணவிகளைக் காதலித்து 'ரிஜிஸ்தர்'



# கல்லூரிக்கு ஒரு கோமாளி



ஜி.எஸ்.பாலகிருஷ்ணன்

திருமணம் புரிந்து கொள்வார்கள். கல்லூரி ஆசிரியர்களில் சிலரும் மாணவிகளிடம் உள்ளத்தைப் பறி கொடுத்து உத்தியோகத்தை இழப்பதுண்டு. பரீட்சைகளில் நவீன முறைகளைக் கையாண்டு மாட்டிக் கொள்ளும் பெருமையும் பராசக்திக் கல்லூரிப் பிள்ளைகளுடைய ஏக போக உரிமை. ஒரு தடவை பரீக்ஷை ஹாலுக்குப் பக்கத்தில் ஓர் ஒலிபெருக்கியைப் பிணைத்து முக்கியமான கேள்விகளுக்கான விடைகளை ஒலிபரப்பச் செய்து ஒப்பற்ற புகழ் பெற்றவர்கள் அந்தக் கல்லூரி மாணவர்கள். மாணவர்களுக்குக் கொஞ்சமேனும் பின்வாங்காது மணி மணியான விஷமங்களைச் செய்து மாதர் குலத்துக்குக் கீர்த்தி தேடித் தந்தார்கள் அங்கு படித்து வந்த மாணவிகளும்.

இதனால் பராசக்திக் கல்லூரியின் பெயர் பத்திரிகைகளில் அடிக்கடி அடிபட்டது. அதன் பிரின்ஸிபால் துரோணாச்சாரியின் பெயரும் உலகத்துக்கு நன்றாகத் தெரிந்திருந்தது.

ஆனால் சுந்தரவரதன் பணியாற்றிய காவேரிக் கல்லூரியில் பிள்ளைகளோ கர்ம சிரத்தையாகப் பாடம் படிப்பதைத் தவிர, மருந்துக்

குக்கூட ஒரு விஷமம் செய்யவில்லை. காதல் என்றால் காதைப் பொத்திக்கொள்வார்கள். ஒவ்வொரு மாணவியையும் தன் சொந்தப் பாட்டியாகக் கருதும் அளவுக்கு அவர்கள் கலாசாரமும் பண்பும் வளர்ந்திருந்தன. வேலை நிறுத்தம் போன்ற நீசச் செயல்களைப் பற்றி மனத்தினால் எண்ணுவதே பாபம் என்று தீர்மானமாகக் கருதினார்கள்.

தப்பித் தவறிக்கூட ஹாஸ்யமாகப் பேசி விடமாட்டான் காவேரி காலேஜ் மாணவன். ''இது ஹாஸ்யம், சிரிக்கலாம்'' என்று வாத்தியார் சம்மதித்தால் மட்டும் நகைப் பார்களே தவிர, மற்றப்படி முனிபுங்கவர் களாகவேதான் திகழ்ந்து வந்தனர்.

இதனால் காவேரி காலேஜின் பெயர் பத்திரிகைகளில் அடிபடவில்லை. பிரின்ஸிபால் சுந்தரவரதன் குன்றுக்குள் தீபமாகவே திகழ்ந்தார். தம் காலேஜின் நிலைமையை எண்ணி மிகவும் துக்கப்பட்டார்.

அமர்த்தினார். யாராவது ஒரு போக்கிரி மாணவனாவது காதல் லீலை பண்ணி, அது பத்திரிகையில் பிரமாதமாக அடிபடாதா என்ற நப்பாசைதான்! ஆனால் ஆசிரியைகளைக் கண்டு வெட்கித் தலைகுனிந்தபடி, புது மணப் பெண்ணைப் பாடம் கேட்டார்கள் பிள்ளைகள்! அந்த இளம் பெண்களைச் சொந்தப் பாட்டிக்கு மேல் நேசித்தார்கள். மாணவர்களின் இந்த விபரீத மனப் போக்கைக் கண்டு மனம் வெதும்பி ஊரை விட்டே ஓடிவிட்டாள் ஓர் ஆசிரியை. கல்லூரி ஆண்டு விழாவில் வேடிக்கை நாடகங்கள் போடலாம், வாத்தியார்களைத் தாராளமாகக் கேலி செய்யலாம் என்று பிரின்ஸிபால் சம்மதம் தந்தும்




கல்லூரி ஜீவ களையுடன் உயிர் பெற்று எழுவதற்காகச் சுந்தரவரதன் எடுத்துக்கொண்ட முயற்சிகள் எல்லாம் வீணாயின. ஹாஸ்யமில்லாத ஜாம்பவான்களையெல்லாம் வேலையிலிருந்து விலக்கி நவயுவர்களைப் பேராசிரியர்களாக அமர்த்தினார். ஆனால் கல்லூரியில் சேர்ந்த உடனேயே ஹாஸ்யப் பத்திரிகைகளையெல்லாம் மறந்து வேதாந்த சம்பந்தமான புத்தகங்களைத் தேடினார்கள் இந்த இளங் காளைகள். இந்தச் சாபக்கேட்டை எண்ணி மனம் புழுங்கினார் பிரின்ஸிபால். பூத்துக் குலுங்கும் யுவதிகளைப் பேராசிரியைகளாக

கூட, மாணவர்கள் அரிச்சந்திரனின் கதையைத்தான் அரங்கேற்றினார்கள். மாணவ மாணவிகள் ஔவையாரின் திவ்விய சரித்திரத்தை இசை நாடகமாக நடித்தனர்.

பிரின்ஸிபால் சுந்தரவரதனுக்குத் தன் கல்லூரியின் 'பாதாலஜி' (Pathology)யை எப்படிச் சரிசெய்வது என்று தெரியவில்லை தான்! இன்னும் சில வருஷங்களில் பிள்ளைகள் தாடி வளர்த்தபடி கமண்டலத்துடன் வகுப்புக்கு வந்தாலும் வரலாம் என்று பயந்தார். மாணவிகள் என்ன ஆவார்கள் என்று அவரால் நினைத்துப் பார்க்கவே முடியவில்லை.

இந்த வேளையில் அமெரிக்காவிலிருந்து 'விஸிட்டிங்' பேராசிரியராக வந்து சேர்ந்தார் டாக்டர் பிளாக். டாக்டர் பிளாக்கிடம் தம் கல்லூரியை வாட்டி வரும் சாபக்கேட்டைத் தீர்க்கமாக விவரித்தார் சுந்தரவரதன். மாணவ மாணவிகளைத் தனித் தனியாகப் பேட்டிகாண விரும்பினார் அமெரிக்கப் பேராசிரியர். கல்லூரியில் ஏன் உயிரில்லை என்பதைப் புள்ளி விவரங்களுடன் ஆராய விரும்பினார் அவர். வருடக் கடைசியில் அவர் பிரின்ஸிபாலுக்கு ஒரு பெரிய வியாசமே எழுதித் தந்தார். மொஹெஞ்சதாரோ, ஹாரப்பா நாகரிகத்தில் தொடங்கி, மகாத்மா காந்தியின் உப்புச் சத்தியாக்கிரகம் வரையில் என்னென்ன நடந்தது என்பதை விவரித்தபின் காவேரிக் கல்லூரிப் பிள்ளைகளுக்குக் காதலிலும் ஹாஸ்யத்திலும் ஏன் ஈடுபாடு இல்லை என்பதைப் பிரமாதமாக ஆராய்ந்து எழுதியிருந்தார் அவர். காவேரி காலேஜில் உடனே ஓர் ஹாஸ்ய இலாகா தொடங்க வேண்டுமென்றும், அதற்கு ஒரு பேராசிரியரும், அரை டஜன் விரிவுரையாளர்களும் தேவை என்றும் குறிப்பிட்டிருந்தார். தாற்காலிகமாகத் தங்கள் ஊரிலிருந்து டாக்டர் ஜானி கே என்ற நவயுவனைக் கோமாளிப் பேராசிரியராகக் காவேரி காலேஜுக்கு அனுப்புவதாகவும் வாக்களித்தார். ஒவ்வொரு கல்லூரியிலும் ஒரு கோமாளிப் பேராசிரியர் இருக்க வேண்டியதை அடித்து வெளியிட்டிருந்தார் அவர். பாடப் புத்தகங்களின் சுமை காரணமாக நரம்புகள் படும் அவஸ்தையைக் குறைப்பதற்குக் கோமாளிப் பேராசிரியர் வழி செய்வார் என்பதே பிளாக் அவர்களின் கூற்று.




அடுத்த விமானத்திலேயே வந்திறங்கினார் ஜானி கே. அவருடைய நடை உடை பாவனைகளே மாணவர்களுக்குச் சிரிப்பை மூட்டின. விளக்கெண்ணெய் வழியும் முகங்களில் மெதுவாகக் கொஞ்சம் தேஜஸ் பிறக்கத் தொடங்கியது. ஜானி கே கல்லூரியில் காலெடுத்து வைத்த ஒரு வாரத்துக்கெல்லாம் சுவர்களில் வாத்தியார்களின் கார்ட்டூன்கள் தோன்றத் தொடங்கின. 'தலைப்பாகை, திருமண், குழந்தைக் கோட்டு போன்ற அலங்காரங்களுடன் தன் வற்றல் உருவத்தை எப்படித்தான் வரைந்தானோ அந்த மாணவன்?' என்று வியந்தார் பிரின்ஸிபால் சுந்தரவரதன். அது மாணவன் இல்லை, மாணவி என்று தெரிந்ததும் வெட்கத்தால் அவர் முகம் சிவந்தது. நாளடைவில் மாணவர்கள் தமக்கு ஒரு புதுப் பெயர் சூட்டியிருக்கிறார்கள் என்று தெரிந்ததும் பிரின்ஸிபாலுக்கு மகிழ்ச்சியினால் தலைகால் தெரியவில்லை. ''சோளக் கொல்லைப் பொம்மை'' என்று பிள்ளைகள் சொல்லும் போதெல்லாம் சந்தோஷத்தினால் இன்னது செய்வது என்று தெரியாமல் தவித்தார். வகுப்புக்களில் இப்பொழுதெல்லாம் மாணவர்கள் 'வேதாந்த தூதன்' படிப்பதற்குப் பதிலாக சினிமாப் பத்திரிகைகள் படித்தார்கள். சாம்பாரில் உப்பு அதிகம் என்பதற்காக ஒரு சின்ன வேலைநிறுத்தம் வேறு செய்தார்கள். மாணவர்கள் மாணவிகளை நேருக்கு நேர் பார்த்தார்கள். தங்கள் பாட்டிகளைத் தாற்காலிகமாக மறந்தார்கள்!

டாக்டர் ஜானி கே அடிக்கடி பிரின்ஸிபால் சுந்தரவரதன் வீட்டுக்கு வந்தார். புளியோதரையை மிகவும் ருசித்துச் சாப்பிட்டார். எண்ணெய் தேய்த்துக் குளிப்பது எப்படி என்று கற்றுக் கொண்டார். எச்சில் பண்ணாமல் தண்ணீர் அருந்தும் கலையைப் பயின்றார். குத்துவிளக்கின் மகிமையை உணர்ந்தார். எல்லாவற்றுக்கும் மேலாக பிரின்ஸிபால் சுந்தரவரதனின் பெண் அனுராதா ஆடும் பரதநாட்டியத்தை மிகவும் மெச்சினார். தாமும் கோமாளித்தனமாக ஆடி எல்லோரையும் மகிழ்வித்தார்.

இப்போதெல்லாம் காவேரிக் கல்லூரியின் பெயர் அடிக்கடி பத்திரிகைகளில் வெளிவரத் தொடங்கியது. காதல் விவகாரங்களில் முன்னணியில் நின்றார்கள் காவேரி காலேஜ் மாணவ மாணவிகள். வேலை நிறுத்தம் செய்வது அவர்களுக்குத் தண்ணீர் பட்ட பாடு. ஆசிரியர்களைப் பயம் காட்டி ஊரை விட்டு விரட்டுவதில் அவர்கள் மன்னர்கள். முன்னொரு காலத்திலே தலையில்

# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.



**பொடுகு**

இது சாதாரணமான உபாதை. இதை ஒருபோதும் அலட்சியம் செய்யக்கூடாது.



**கேசம் உதிருதல்**

உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டம் இல்லாததுதான்.



**இளமையில் வழுக்கை**

இந்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்.

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்றாக அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹெயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினால் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-1 சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ் தபால் பை 10022, பம்பாய்-1

# Silvikrin

சில்விக்ரீன் — கேச ஆரோக்கியத்துக்கான வழி




**ப்யூர் சில்விக்ரீன்**

கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாதகால வைத்தியத்துக்குப் போதுமானது.

**சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்**

உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீரியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது.




SP/1/P/6/63

கட்டுக் குடுமியுடன் நெற்றியில் விபூதி, திருமண்ணுடன் கையில் தூக்குப் பாத்திரத்தை ஏந்தியபடி, தொங்கும் காக்கி நிஜாருடன் காவேரி காலேஜில் படித்து வந்த பிள்ளைகளுக்குப் பதில் சிகரெட் புகை லளித நடனம் புரிய, சீட்டியடித்தபடி, சினிமாப் பத்திரிகை படிக்கும் ஒரு கும்பல் இப்போது கல்லூரி வராந்தாவில் காட்சியளித்தது. கல்லூரி ஜீவ களையுடன் விளங்குவதை எண்ணி அகமகிழ்ந்தார் பிரின்ஸிபால் சுந்தரவரதன். துரோணாச்சாரிக்குத் தான் எந்த விதத்திலும் சளைத்தரில்லை என்று எடுத்துக் காட்டினதில் அவருக்குத் தனி மகிழ்ச்சி. டாக்டர் ஜானி கேயை மனமார வாழ்த்தினார்! அவர் மட்டும் கோமாளிப் பேராசிரியராக வந்திரா விட்டால் தம் கல்லூரி உயிரிழந்து செத்துக் கிடக்குமே என்று எண்ணிப் பார்த்த பொழுது நன்றி காரணமாக அவர் கண்களில் நீர் திவலையிட்டது.

அன்று பிரின்ஸிபால் சுந்தரவரதன் வகுப்பில் ஏகக் கலாட்டா. முக்கியமாக மாணவிகள்தான் கொட்டமடித்தார்கள். தன் பெண் அனுராதாவினால் இவ்வளவு தூரம் விஷமம் செய்ய முடியும் என்று கனவில்கூட அவர் நினைத்திருக்க வில்லை. மாணவர்களில் ஒரு சிலர் சாவி வளையத்தைக் குலுக்கினார்கள். காகித விமானங்கள் பறந்தன. எங்கிருந்தோ ஒரு பூனை 'மியா' வென்று சத்தமிட்டது. அவர் ஹாஸ்யமாகப் பேசா விட்டாலும் 'ஹோ ஹோ ஹோ' என்று இரைந்து சிரித்தார்கள் ஒரு சிலர்.

வீட்டுக்கு வந்ததும், ''அனுராதா!'' என்று குரல் கொடுத்தார். ஆனால் அனுராதாவுக்குப் பதில் அவர் தாயார் ரங்கம்மா தான் அவர் முன் தோன்றினாள்.

''ஏண்டா, உன் புத்தி இப்படிப் போறது? நன்னா இருந்த காலேஜைப் போய் ஏண்டா குட்டிச் சுவர் பண்ணினே? அந்த நாசமாப் போறெ கோமாளியை ஏண்டா வரவழைச்சே?''

''என்ன அம்மா, நீ என்ன சொல்றே?''

''இனிமே என்னத்தைச் சொல்ல இருக்கு? தலைவிதியை நொந்து கொள்ள வேண்டியது தான்! அந்தப் பைத்தியக்காரன் என்ன பொடி போட்டானோ, குழந்தை அனு அவனைத்தான் கலியாணம் பண்ணிக்குவேன்னு தலைகீழாக நிற்கிறாள்! அந்தப் பறங்கிப் பயலுக்கு ஜாதகமா, ஒண்ணா......''

''ஆம், அப்பா! அவர் என் பரத நாட்டியத்தையும், நான் செய்த புளியோதரையையும் வெகுவாக மெச்சனார் அப்பா. நான் அவரைக் கலியாணம் பண்ணிக்கலேன்னா யார் அவருக்கு அந்த ஊரில் புளியோதரை செய்து தருவா?....'' என்று கேட்டபடி குழைந்து நின்றாள் அனுராதா.

பக்கத்து வீட்டில் 'ராக் அண்டு ரோல்' நடனமாடிக் கொண்டிருந்தார் டாக்டர் ஜானி கே!

# இலக்கியத்தில் நகைச்சுவை

தமிழ் இலக்கியத்தில் இரட்டைப் புலவர்கள் பிரசித்தமானவர்கள். அவர்கள் ஒரு தடவை வள்ளல் ஒருவரிடம் பரிசு பெற்றுத் திரும்பும்போது ஒரு பிள்ளையார் கோவிலில் வந்து தங்கினர். இளைப்பாறிய பிறகு பார்த்த போது அவர்களுடைய பரிசில் மூட்டை பறி போய் விட்டதைக் கண்டனர். இந்தச் சமயத்தில் அவர்களுக்குக் கேலிப் பாட்டு ஒன்று உதித்து விட்டது. பிள்ளையாரைத் தவிர யாரும் அந்தப் பரிசிலை எடுத்திருக்க மாட்டார்கள் என்ற தோரணையில் பாட்டு அமைந்துள்ளது.

**தம்பியோ பெண் திருடி;**
**தாயாருடன் பிறந்த**
**வம்பனோ நெய் திருடும் மாயன்—**
**அம்பு வாயில்**
**மூத்த பிள்ளையாரே முடிச்சவிழ்த்தீர்;**
**போமோ உம்**
**கோத்திரத்துக்கு உள்ள குணம்?**

[முருகன் வள்ளியைத் திருடினான்: மாமன் கண்ணன் வெண்ணெய் திருடினான்.]

காளமேகப் புலவர் ஒரு தடவை திருமலைராயன் பட்டினத்தை அரசாண்டு கொண்டிருந்த மன்னனிடம் சென்றார். அந்த அரசவையிலுள்ள பண்டிதர்களெல்லாம் காளமேகப் புலவர் மீது பொறாமையினால் அவரை அலட்சியப்படுத்தினார்கள். 'நீர் யார்?' என்று அவர்கள் கேட்க, அவர்களைக் கேலி செய்யும் தோரணையில் ஒரு கவிதையே பாடிவிட்டார் காளமேகப் புலவர். கவி என்ற சொல்லுக்குக் குரங்கு என்ற பொருளும் உண்டல்லவா? அதை வைத்துக் கொண்டு அவர் பாடிய பாட்டைக் கேட்டுச் சபையில் உள்ளோர் அனைவரும் நகைத்தனர். புலவர்கள் வெட்கித் தலை குனிந்தனர். அவர் பாடிய பாட்டு இதுதான்:

**வால் எங்கே? நீண்ட வயிறு எங்கே?**
**முன் இரண்டு**
**கால் எங்கே? உள்குழிந்த கண் எங்கே?**
**—சாலப்**
**புவிராயர் போற்றும் புலவீர்காள்; நீவிர்**
**கவிராயர் என்று இருந்தக்கால்!**

ஔவையாருக்கு ஓர் ஏழைக் குடியானவன் விருந்து செய்து உபசரிக்க விரும்பினான். அவன் மனைவியோ அடங்காப்பிடாரி. இந்தச் செய்தியை அவன் மனைவியிடம் தெரிவித்த போது ஏற்பட்ட அனுபவத்தை ஔவையார் நகைச்சுவை ததும்பச் சொல்லும் அழகே தனி.

**இருந்து முகம் திருத்தி**
**ஈரோடு பேன் வாங்கி**
**விருந்து வந்தது என்று விளம்ப—**
**வருந்தி மிக**
**ஆடினாள், பாடினாள், ஆடிப்**
**பழமுறத்தால்**
**சாடினாள் ஓடோடத்தான்!**

# நிமிஷக் கதைகள்

சூத்தல் பேச்சில் நிபுணரான ஜார்ஜ் பெர்னார்ட் ஷா ஒரு முறை பலர் முன்னிலையில் கூறினார்: ''இந்தப்பெண்களுக்கே புத்தி கட்டை. நல்லதைப் பகுத்துணரும் அறிவே கிடையாது. சொர்க்கத்தைத் தேடிப் போவார்கள். நரகத்தை விலைக்கு வாங்கி வருவார்கள். ஆண்கள் அப்படி இல்லை. பொருளின் தரமறிந்து நல்ல பொருளையே தமதாக்கிக் கொள்ளுவார்கள்!''

அங்கு குழுமியிருந்த பெண்களுக்குத் தலை இறக்கமாகப் போய்விட்டது. என்ன பதில் சொல்லுவது



என்று புரியாமல், மௌனம் சாதித்தனர்: அப்பொழுது அவர் மனைவி சொன்னாள்: ''டார்லிங்! நீங்கள் கூறியது நூற்றுக்கு நூறு உண்மை. நான் உங்களைத் தேடிப் பிடித்தேன் என் மணாளராக. நீங்கள் என்னை மனைவியாக வரித்தீர்கள்! உங்களுக்குச் சொர்க்கம் கிடைத்து விட்டது. எனக்கு..?''

அப்பொழுது அங்கு எழுந்த சிரிப்பொலி அடங்க எத்தனை நேரம் ஆகியிருக்கும் என்பதை யாரும் கணக்கெடுக்கவில்லை.



லண்டனில் ஒரு விருந்துக்குப் பலதரப் பட்டவர்களுக்கும் அழைப்புப் போயிருந்தது. எளியவர்களும் பணக்காரர்களும் கூடியிருந்தனர். தொழிற் கட்சித் தலைவர் ஒருவரின் மனைவியும் பெரும் பணக்காரப் பெண்மணி ஒருத்தியும் அருகருகே அமர்ந்திருந்தார்கள். பேச்சுவாக்கில் பணக்காரப் பெண்மணி, ''என் வைர நகைகளை 'அமோனியா' வினால் கழுவுகிறேன். பொன் நகைகளைப் பாலில் கழுவுகிறேன். மற்றவற்றைச் சாராயத்தினால் சுத்தம் செய்கிறேன். நீங்கள் உங்கள் நகை நட்டுக்களை எப்படிக் கழுவுகிறீர்கள்?'' என்று கேட்டாள், செல்வச் செருக்குத் தொனிக்க.

தொழிலாளர் தலைவரின் மனைவிக்கு இதைக் கேட்கக் கேட்க ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. எனவே, ''அப்பப்பா! இந்த நகைகளைச் சுத்தம் செய்வது பெருந் தொல்லை. அது எனக்குக் கட்டோடு பிடிப்பதில்லை. அதனால் என் நகைகள் அழுக்காகி விட்டால் நான் தலையைச் சுற்றித் தூர எறிந்துவிடுவது வழக்கம்!'' என்றாள்.



வெங்கட்டு வயதில் சிறியவனாயிருந்தாலும் பெரிய வாயாடி. எதையுமே மிகைப்படுத்திச் சொல்வது அவன் வழக்கம். ஒரு சமயம் அவன் தன் மாமாவோடு சிம்லாவுக்குப் போயிருந்தான். திரும்பி வந்து தன் நண்பர்களிடம் அளக்கலானான். ''சிம்லாவில் ஒரே குளிர். குழாயில் தண்ணீர் பனிக் கட்டியாகவே உறைந்துவிடுகிறதாக்கும்!'' என்றான். ஒரு பையனுக்கு மட்டும் எரிச்சல் தாங்கவில்லை. ''நீ தார்ஜிலிங் போயிருக்கிறாயா?'' என்று கேட்டான்.

''இல்லை!''

''நான் போயிருக்கிறேன். அங்கே உன் வீட்டுக் குளிர், என் வீட்டுக் குளிர் இல்லை. சிம்லாக் குளிர் எந்த மூலைக்கு?''

''அப்படியா?''

''அங்கே நம்மால் பேச முடியாது. என்ன பேசினாலும் அப்பேச்சு பனிக் கட்டியாகவே வந்து விழுகிறது!''

''அப்படியானால் ஒருவர் பேச்சை இன்னொருவர் எப்படித் தெரிஞ்சுப்பாங்க?''

''அப்படியே அந்தப் பனிக்கட்டிகளை எடுத்துப் போய்த் தீயில் உருக்குவார்கள். அப்பொழுது பேச்சு பொரியும்; புரியும்!'' என்றான் அந்தப் பையன்.

'அளுக்கு மோட்டாளாக இன்னொருவன் வந்து விட்டானே!' என்று வாயாடி வெங்கிட்டு வாலைச் சுருட்டிக் கொண்டான்.



சிராக் ஹஸன் 'ஹஸ்ரத்' என்பவர் ஓர் உருதுப் புலவர். தினமும் லாகூரிலுள்ள ஒரு ஹோட்டலுக்குக் காப்பி அருந்தப் போவது அவர் வழக்கம்.

ஒரு நாள் அவர் ஒரு சர்வரிடம் ஒரு கப் காப்பிக்கு 'ஆர்டர்' கொடுத்துவிட்டு உட்கார்ந்திருந்தார், உட்கார்ந்திருந்தார், அப்படி உட்கார்ந்திருந்தார். காப்பி வரும் வழியாக இல்லை.

பொறுமை இழந்து அவர், ஹோட்டல் மானேஜரிடம் சென்று, ''நான் காப்பிக்கு ஆர்டர் செய்து வெகு நேரமாகியும் வரவில்லை'' என்று புகார் செய்தார்.

''நீங்கள் காப்பிக்கு ஆர்டர் கொடுத்த சர்வருக்கு நரைத்த தலையோ?'' என்று கேட்டார் மானேஜர்.

''நான் காப்பிக்கு ஆர்டர் கொடுத்த பொழுது அவன் தலை கறுப்பாகத்தான் இருந்தது. நரைக்கவில்லை. இப்பொழுது எப்படியோ?'' என்றார் 'ஹஸ்ரத்.'





# எதிராஜ் கல்லூரி

**உ**தார குணத்தைக் காட்டப் பொதுவாக இரண்டு வழிகள் கண்டுபிடிக்கப்படுவதுண்டு. தர்மத்துக் கென்று நூறு ரூபாய்களை ஒதுக்கினால், நூறு பேர்களுக்குத் தலா ஒரு ரூபாய் கொடுத்து அனுப்பி விட்டு அந்தச் சம்பவத்தை அப்படியே மறந்துவிடுவது ஒரு வழி. தகுதியான ஒரே ஆளைப் பார்த்து அந்த நபரிடம் நூறு ரூபாய்களையும் அப்படியே கொடுத்து, அவருடைய கவலை தீருகிறதா என்று மறக்காமல் கவனித்து நின்று மேலும் உதவ முன் வருவது இரண்டாவது வழி. பெரும்பாலோர் முன் வழி நடக்க, வெகு குறைந்த அளவிலேயே, சிலர் இரண்டாவது வழியைப் பின்பற்றுகிறார்கள். அந்தக் குறைந்த எண்ணிக்கையான சிலரில் குறிப்பிடத் தக்கவர் காலம் சென்ற வழக்கறிஞர் மேதை திரு வி. எல். எதிராஜ் அவர்கள். தாம் வாழ்நாளில் உழைத்துச் சேமித்த திரண்ட செல்வத்தின் பெரும் பகுதியைப் 'பெண் கல்வி வளர்ச்சி' என்ற ஒரே துறைக்கு ஒதுக்கினார். அது ஓங்கி வளர்ந்ததைத் தம் வாழ்நாளிலேயே கண்டு மகிழ்ந்தார். தம் காலத்துக்குப் பின்னாலும் தாம் நிறுவிய ஸ்தாபனம் செழுமையுடன் வளரத் தம் உயில் மூலம் வழி செய்தார்.

சென்னை எழும்பூர் — மௌண்ட்ரோட் பகுதி சந்திப்பிலுள்ள எதிராஜ் மகளிர் கல்லூரி, திரு எதிராஜ் அவர்களைக் காலமெல்லாம் பெண்கள் சமூகம் நினைவிலிருத்திக் கொள்ளக் கூடிய விலைமதிப்பற்ற ஞாபகார்த்தமாக விளங்கக் கூடிய ஸ்தாபனமாகும்.

செல்வத்தில் திளைத்த திரு எதிராஜ் ஒரு சிறந்த சிக்கன நிபுணரும்கூட. கலை ஆர்வம் மிகுந்தவர். ஆனால் கண்டபடி பணத்தை வாரி விடுபவர் அல்ல.

ஒரு சமயம் ராமகிருஷ்ண மாணவர் இல்லத்தின் செயலாளரான காலம் சென்ற சி. ராமானுஜாச்சாரியாரும், விவேகானந்தா கல்லூரியைத் தோற்றுவிக்கக் காரணமாக இருந்த, காலம் சென்ற எம். சுப்பராய அய்யரும், மாணவர் இல்லத்துக்கான பொருளுதவி வேண்டித் திரு எதிராஜிடம் வந்தார்கள். ''ஒரு பெரும் சாதனைக்கு என் செல்வமனைத்தையும் தர வேண்டுமென்று எண்ணியுள்ளேன். அதனை வேறு காரியங்களுக்குச் செலவு செய்ய என் மனம் இடம் தரவில்லை'' என்று கூறினார் எதிராஜ்.

அவருடைய உள்ளக் கிடக்கையை ஓரளவு தெரிந்து கொண்டிருந்த ஸ்ரீ சுப்பராய ஐயர், உடனடியாக அந்தப் பெருஞ் சாதனைக்கான ஒரு யோசனையைச் சொன்னார்.

அப்போது சென்னை நகரில் மாணவர்களுக்கான பல புதிய கல்லூரிகள் தோன்ற ஆரம்பித்த காலம். பெண்களுக்கான கல்லூரி ஒன்று நல்ல முறையில் தொடங்கி நடத்தப்படுமானால் சென்னை நகரப் பெண்களுக்கு எத்தனை உதவியாக இருக்கும் என்று தோன்றியது. 'ஓர் ஆண் மகனைப்

திரு வி. எல். எதிராஜ்



படிப்பித்தால் ஒரு தனி மனிதனைப் படிப்பிக்கிறாய். ஒரு பெண்ணைப் படிப்பித்தாலோ ஒரு குடும்பத்தையே படிப்பித்தவனாவாய்' என்ற ஆங்கிலப்பொன்மொழி அவருக்கு நினைவுக்கு வந்தது. திரு எதிராஜிடம் சுப்பராய ஐயர் இந்தக் கருத்தைத் தெரிவித்தார். அந்தக் கணத்திலேயே கருத்து செயலாக மாறத்தொடங்கியது. வெகுகுறுகிய காலத்திலேயே தம் இருப்பிடத்துக்குச் சமீபத்திலுள்ள ஒரு பெரிய கட்டடத்தையும் பாங்கியிலிருந்த ஐந்து லட்சம் ரூபாயையும் ஒதுக்கி, பெண்கள் கல்லூரி எழுப்பத் தேவையான தஸ்தாவேஜிகளுடனேயே எதிராஜ் சுப்பராய ஐயரை நாடி வந்து விட்டாராம். எதிராஜ் விவேகானந்தா கல்லூரி நிர்வாகக் குழுவில் பங்கெடுத்துக் கொள்ளும்படி செய்யப்பட்டார்! இந்தப் பணியைத் தொடங்க யோசனை கூறியதில் ஒரு பங்கு முன்னாள் கல்வித் துறைத் தலைவர் ஸ்டாதம் அவர்களுக்கும் உண்டு.



1948ம் ஆண்டு ஜூலை மாதம் இரண்டாம் தேதியன்று தொடங்கப்பட்ட இந்தக் கல்லூரி சென்னை ராயப்பேட்டை பகுதியில் உள்ள அரசினர் இஸ்லாமிய மகளிர் கல்லூரிக் கட்டடத்தின் ஒரு பகுதியில் செயல்பட ஆரம்பித்தது. நூற்றுத்தொண்ணூற்று ஆறு மாணவிகள். இண்டர்மீடியட் வகுப்பும், பி. ஏ. பொருளாதார வகுப்பும் ஆரம்பமாயின. அனுபவம் நிறைந்த முதிர்ந்த ஆசிரியைகளையும் தேர்ந்தெடுத்துப் பயிற்சியளிக்க வசதி செய்யப்பட்டது.

அதே ஆண்டில் ஆகஸ்டு இருபத்திநான்காம் தேதி கல்லூரியை முறைப்படி திறந்து வைத்த ராஜாஜி அவர்கள் 'வயல்களுக்கு நீர் பாய்ச்ச எத்தனையோ குளங்கள் உண்டு. ஆனால் எதிராஜ் அவர்களின் உதார குணம் என்ற இந்தக் குளம் வருங்கால மகளிர் சமுதாயம் என்ற நாற்றங்காலுக்கே நீர் பாய்ச்ச உதவும்' என்று குறிப்பிட்டார்.

கிழக்கிந்தியக் கம்பெனி நிர்வாக காலத்தில் தலைமைத் தளபதியின் இருப்பிடமாகவும், பிறகு விக்டோரியா ஹாஸ்டலாகவும், பிறகு பப்ளிக் சர்வீஸ் கமிஷன் காரியாலயமாகவும் விளங்கிய மூலக் கட்டடத்தைச் சென்னை சர்க்கார், கல்வித் துறைக்குத் தம் பணியாக, தொண்ணூற்றி ஒன்பது வருடக் குத்தகை ஏற்பாட்டில் கொடுக்க முன் வந்த போது இந்தக் கல்லூரி எழும்பூர்ப் பகுதியில் உள்ள தற்போதைய கட்டடத்துக்கு 1951ம் ஆண்டு ஜூலை மாதம் முதல் தேதி இடம் மாறியது. இந்த மாறுதலுக்கு முன்பே தேவையான விஞ்ஞான பரிசோதனை சாலைகளும் எழுப்பப்பட்டு விட்டன. 1958ம் ஆண்டில் நவீன வசதிகள் நிறைந்த ஹாஸ்டல் கட்டடமும் எழுந்துவிட்டது. நூற்றி இருபது மாணவிகள் இப்போது அங்கு தங்கிப் படிக்கிறார்கள்.

ஸ்ரீமதி ஜி. பார்த்தசாரதி, ஸ்ரீமதி மோனா ஹென்ஸ்மன் முதலியவர்களைத் தொடர்ந்து இப்போது கல்லூரி முதல்வராகப் பணியாற்றுபவர் மிஸ் மாத்தியூ அவர்கள். கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையில் படித்து ரசாயன பாடத்தில் பட்டம் பெற்றவர். மதுரை லேடி டோக் கல்லூரியிலும் ஆசிரியையாகப் பணியாற்றி அனுபவம் பெற்றவர். எதிராஜ் கல்லூரியில் 1951ம் ஆண்டில் பேராசிரியையாகச் சேர்ந்த அவர், 1960ம் ஆண்டிலிருந்து கல்லூரி முதல்வராகச் சேவை செய்கிறார். அத்துடன் பி. எஸ்ஸி. பட்டப் படிப்பு மாணவிகளுக்கு ரசாயன பாடமும் போதிக்கிறார். கல்லூரி முதல்வரைச் சந்திக்கச் சென்ற நேரம் அவர் உற்சாகமாக இருந்த நேரம்.



மிஸ் மாத்தியூ



காரணம் கடந்த ஒரு வார காலத்தில் அவருடைய மாணவமணிகள் பேச்சு, விவாதம், சங்கீதம் முதலிய பல போட்டிகளில் வெளிக் கல்லூரி மாணவ மாணவிகளுடன் போட்டியிட்டு மகத்தான வெற்றியுடனும் கோப்பை கேடயங்களுடனும் திரும்பி வந்திருந்தார்கள்.

''எங்கள் கல்லூரி வாயில் ஏழை, பணக்காரர் என்ற வித்தியாசமில்லாமல் அதிக மார்க்குகள், குறைந்த மார்க்குகள் என்ற அடிப்படையில்லாமல், ஜாதி மதபேதமில்லாமல் கல்வியை நாடி வரும் எல்லா மாணவிகளுக்குமே திறந்து நிற்கிறது. இங்கு நாங்கள் மாணவிகளின் அறிவு வளர்ச்சிக்கு எவ்வளவு அக்கறை காட்டுகிறோமோ, அதைவிட அதிகமாகவே அவர்களுடைய பண்பு வளர்ச்சியில் அக்கறை காட்டுகிறோம். ஒரு பெண்ணின் வருங்காலத்தைப் பண்பின் அடிப்படையில் விளையும் கல்விதான் பிரகாசிக்கச் செய்யும்'' என்று மிஸ். மாத்யூ குறிப்பிட்டார்.

இருபது இருபது மாணவிகளாகப் பிரித்து ஒவ்வொரு ஆசிரியையிடமும் ஒப்படைத்திருப்பதன் மூலம், ஒவ்வொரு மாணவியையும் நேரடியாகக் கவனித்துக் குறைகளைப் போக்க வாய்ப்பிருக்கிறது. மாணவிகளுக்கும் தாங்கள் ஓர் ஆசிரியையின் நேர் கவனத்தில் இருக்கிறோம் என்ற எண்ணத்தில் மனத்திலே அச்சமும் அடக்கமும் தோன்றிப் படிப்பில் போதிய கவனத்தைச் செலுத்த அவசியம் ஏற்படுகிறது. விளைவு! மாணவிகளுக்குப் பரீட்சையில் வெற்றி. அதன் மூலம் கல்லூரிக்குப் பெருமை.

ஒவ்வொரு நாளும் கல்லூரி தொடங்கு முன், கால் மணி நேரத்துக்கு ஆசிரியைகளும் மாணவிகளும் பொது மண்டபத்தில் கூடுகிறார்கள். வெள்ளிக்கிழமை காலை பிரார்த்தனை நேரமாகப் பயன்படுகிறது. சமரச சன்மார்க்கமாக, பல மதங்களைச் சேர்ந்த பிரார்த்தனை நூல்களிலிருந்தும் பகுதிகள் படிக்கப்படுகின்றன. ஒவ்வொரு புதன்கிழமை காலையிலும், உலக விவகாரங்கள் பற்றிய செய்திகள் விமரிசிக்கப்படுகின்றன. மற்ற நாட்களில், கடமை, கட்டுப்பாடு, நல் வாழ்வு சம்பந்தமான செய்திகளையும், கட்டுரைகளையும் ஆசிரியைகள் படிக்கிறார்கள். இந்த ஏற்பாடு மாணவிகளின் பொதுஅறிவையும் கடமை உணர்ச்சியையும் தூண்ட பெருவாக உதவுகின்றன.

உடற் பயிற்சி விஷயத்திலும் இந்தக் கல்லூரி நிறைய அக்கறை எடுத்துக்கொள்கிறது. உடற்பயிற்சி ஆசிரியை மிஸ். பெஞ்சமின் கண்டிப்புக்கார நபராம்! உடற்பயிற்சி வகுப்புகளுக்கும் விளையாட்டுகளுக்கும் மட்டம்போட விரும்பும் மாணவிகளுக்கு மிஸ் பெஞ்சமின் என்றால் சிம்ம சொப்பனம். எங்கு ஒளிந்திருந்தாலும் மாணவிகளைக் கண்டுபிடித்து இழுத்து வந்து பயிற்சி யளிக்காமல் இருக்க மாட்டாராம். வேண்டுமென்றே மறந்தோ விளையாட்டுக்களுக்கான பிரத்தியேக ஆடைகளை வீட்டிலிருந்து கொண்டு வராத மாணவிகளுக்குத் தண்டனை என்ன தெரியுமா? கல்லூரிக் கட்டடங்களைச் சுற்றிச் சுற்றிக் கால்கள் துவளும் வரை ஓடி வரவேண்டுமாம்.

கல்லூரித் தொடக்க நாளிலிருந்தே பணியாற்றும் தமிழ்ப் பேராசிரியை ஆ. ரா. இந்திராவைச் சந்தித்த போது, ''பொதுவாகக் கல்லூரியில் நுழையும் மாணவிகளில் அதிகம் பேர் கான்வென்டுகளிலிருந்தும் ஆங்கில மீடியமுள்ள பள்ளிகளிலிருந்தும் வருபவர்களாயிற்றே. அவர்கள் தமிழ்ப் பாடங்களில் எவ்வளவு தூரம் ஆர்வம் காட்டுகிறார்கள்?'' என்று கேட்டேன்.

''வருட ஆரம்பத்திலேயே அத்தகைய சில மாணவிகளுக்கு இடைவேளைகளில் பிரத்தியேக வகுப்பு நடத்தி ஆர்வத்தை ஏற்படுத்தி விடுவோம். சீக்கிரமே அவர்கள் மற்ற மாணவிகளின் திறமைக்கு ஈடாக உயர்ந்து விடுவார்கள்'' என்று குறிப்பிட்டார்.

ஒரு வருடம் பாரதி விழாவுக்கு ராஜாஜியைத் தலைமை வகிக்க அழைத்திருந்தார்கள். அவரை வரவேற்று உள்ளே அழைத்துப் போகக் கல்லூரி ஸ்தாபகர் திரு எதிராஜ், கல்லூரி முதல்வர் மோனா ஹென்ஸ்மென், தமிழ்ப் பேராசிரியை இந்திரா, மாணவிகள் எல்லாரும் வாயிலருகில் நின்றிருந்தார்கள். அச்சமயம் ஒலிபரப்பு ஏற்பாடு சரியாக இருக்கிறதா என்று கவனிக்க இந்திரா உள்ளே போய்த் திரும்பி வந்தார். ''அடடா! தலைவர் வரும் நேரமாயிற்று! என்ன அவசர வேலையிருந்தாலும் நீ இந்த இடத்தை விட்டுப் போகலாமோ? இன்று தமிழ்ச் சங்கக் கூட்டம். நீயல்லவா முன்னால் நின்று தலைவரை வரவேற்க வேண்டும்?'' என்றாராம் திரு எதிராஜ். தமிழுக்கும் தமிழாசிரியைக்கும் முக்கியத்துவம் கொடுத்து ஸ்தாபகராகிய தாமே பின்னணியில் நிற்க விரும்பிய திரு எதிராஜின் கனவு வீணாக வில்லை. கடந்த ஆண்டில் தமிழ்ப் பரீட்சை எழுதிய அத்தனை பேருமே வெற்றி பெற்றிருக்கிறார்கள்.

மற்றப் பாடங்களிலும் சோடையில்லை என்பதை நிரூபித்திருக்கின்றனர். ரசாயனம், பொருளாதாரம், சரித்திரம் ஆகிய மூன்று பாடங்களிலும் பட்டப் பரீட்சைகளில் மாணவிகள் நூற்றுக்கு நூறு சத விகிதம் வெற்றி பெற்றிருக்கிறார்கள். பொருளாதார பாடத்துக்கான தங்கப் பதக்கத்தை இந்தக் கல்லூரி மாணவி பெற்றிருக்கிறாள். நூற்றுத் தொண்ணூற்றி ஆறு மாணவிகளுடன் 1948ம் ஆண்டில் தொடங்கிய இந்தக் கல்லூரியில் இப்போது ஏறத்தாழ ஆயிரம் மாணவிகள் படிக்கிறார்கள். புகுமுக வகுப்பைத் தவிர பொருளாதாரம், சரித்திரம், ஆங்கில இலக்கியம் மூன்றுக்கான பி. ஏ. பட்ட பாடமும், ரசாயனம், உயிரியல் ஆகியவற்றுக்கான பி. எஸ்ஸி. பட்ட பாடமும் அளிக்கப்படுகின்றன.

கல்லூரி நிர்வாகக் குழுவின் தலைவராகப் பணியாற்றும் திரு வி. டி. ரங்கசாமி, காலம் சென்ற திரு எதிராஜின் உற்ற நண்பர். சக வழக்கறிஞர். திரு எதிராஜ் அவர்கள் தம் வாழ்நாளிலேயே தம் கனவுகள் நனவாவதைக் கண்டு மகிழ்ந்த பிறகே மறைந்தார் என்றாலும், கல்லூரியின் வளர்ச்சிக்கான பொறுப்பைத் தம் நண்பரிடம் விட்டுப் போயிருக்கிறார். வி. எல் எதிராஜ் என்னும் சொற்றொடரை அவருடைய நண்பர்கள், 'வெரி — லக்கி' எதிராஜ் என்று விளக்குவர். அத்தகைய மனிதர் நிறுவிய கல்லூரியில் படிக்க வாய்ப்புப் பெறும் மாணவிகள் தங்கள் வாழ்க்கையிலும் 'வெரி லக்கி'யாக விளங்குவார்கள் என்று எதிர்பார்க்கலாமல்லவா!

டிசம்பர்

20ல்

சென்னை கெயிட்டி - மகாராணி
புவனேசுவரி - நூர்ஜஹான்

மற்றும் தென்னகமெங்கும்





ஜெமினி கணேசன்

அளிக்கும்

ராஜலட்சுமி பிக்சர்ஸ்

# ஏழை பங்காளன்

கதை, வசனம் - மா. லட்சுமணன் - பாடல்கள் - கவிஞர் கண்ணதாசன் - வாலி - பஞ்சு அருணாசலம்
ஒளிப்பதிவு - தம்பு - ஆர்ட் - பாலு - எடிட்டிங் - நாராயணன்
பாடல்கள் ரிகார்டிங் - T.S. ரங்கசாமி - ஸ்டில்ஸ் - சாரதி
சங்கீதம் திரை இசை திலகம் - K.V. மகாதேவன்
ஸ்டுடியோ - மெஜஸ்டிக்

டைரக்ஷன்

K. சங்கர்

தயாரிப்பு

வயலின் K.V. மகாதேவன்





பூரண விநியோகஸ்தர்கள் - மஹாலக்ஷ்மி பிலிம்ஸ் மதுரை - SOLE PROPRIETOR - KT.S. - சென்னை-4

ELEGANT

# அறிவுக் கனலே, அருட் புனலே!

## ரா. கணபதி

**47**

**ஹி**ந்துவானார் நரேந்திரர்.

எனினும் ஆரம்பகாலத்தில், பிரம்ம சமாஜத்தினருக்குரிய ஓர் அச்சம் நரேந்திரருக்குச் சிறிது இருந்தது. அதாவது தீவிரமாகத் தியானம் புரிவதால் தேகம் சிதறி விடும், ஒருவிதமான பித்து ஏறி விடும் என்று ஒரு பயம் நரேந்திரருக்கு இருந்தது. இதை அருமையான உவமையால் தெளிவித்தார் பரமஹம்ஸர்.

''பாயஸக் கடலாக இருக்கிறான் பரமன்! குழந்தாய், நீ அந்தக் கடலில் முழுக மாட்டாயா? கோப்பையில் பாயஸம் இருப்பதாகவும், நீ ஓர் ஈயாக இருப்பதாகவும் எண்ணிக் கொள். பாயஸத்தை அருந்த வேண்டுமானால் நீ என்ன செய்வாய்?'' என்று கேட்டார் பரமஹம்ஸர்.

''கோப்பையின் விளிம்பில் உட்கார்ந்து கொண்டு பாயஸத்தை ருசி பார்ப்பேன். ஆனால் பாயஸத்துக்குள்ளேயே விழுந்தால் உயிர் போய் விடுமே என்று பயந்து ஜாக்கிரதையாகத்தான் இருப்பேன்'' என்றார் நரேந்திரர்.

''ஆனால் நீ ஒன்றை மறந்து போனாய் என் பிள்ளாய்! இந்தப் பாயஸம் அமிருதமல்லவா? இதில் விழுபவர்கள் சாக மாட்டார்கள்; மிருத்யுவைக் கடந்து அமிருதமாவார்கள். அறிவற்றவர்கள் தான் ஆண்டவனிடம் பக்தி செலுத்தும்போது பிரிந்து நிற்க எண்ணுவார்கள். நான் சொல்கிறேன் குழந்தாய், இந்த அமிருத சாகரத்தில் பயப்படாமல் முழுகு'' என்று ஊக்கினார் ராமகிருஷ்ணதேவர்.

**ப**ரமஹம்ஸர் எந்தச் சமயத்தையும் கண்டித்ததில்லை.

வாமாசாரம் என்ற முறையில் ஸ்திரீகளும் புருஷர்களும் பயங்கரமான விதத்தில் ஒன்று சேர்ந்து புரியும்சாதனையைக் கூட அவர் தள்ளியதில்லை. ''வீட்டுக்கு வாசல் வழியாகவும் வரலாம்; புறக்கடைச் சாக்கடை வழியாகவும் வரலாம்; இவர்கள் பின்சொன்ன வழியில் வருபவர்கள்'' என்றே சொல்லுவார். அப்படிச் சொல்லும்போதே மாணவர்களை ஜாக்கிரதை செய்து விடுவார்.

''இதையெல்லாம் பற்றி நாம் ஏன் பேச வேண்டும்? என்னைப் பொறுத்த மட்டில் நான் எந்தப் பெண்ணையும் தாயாகவே காண்கிறேன். இது ஒரு சுத்தமான மனப்பான்மையாகும். இதில் எந்த அபாயமும், பயமும் இல்லை. அல்லது பெண்களைச் சகோதரியராகவும் காணலாம்; அதுவும் தவறில்லை. மற்ற மனோபாவங்கள் எல்லாம் கடினமானவை; ஆபத்தானவை. அவற்றில், லட்சியத்தின் தூய்மையை வழுவாது கடைப் பிடிப்பது சிரமசாத்தியமாகும்'' என்பார்.

உயர்ந்ததொரு நிலையில் ஆரோகணித்துக் கூறுவார் பரமஹம்ஸர்: ''பல கருத்துக்கள் இருக்கின்றன; பல வழிகள் இருக்கின்றன...... பல வழிகளிலும் செல்லும் சாதகர்கள் ஒருவரோடு ஒருவர் சச்சரவிட்டுக் கொள்கிறார்கள். நீங்களெல்லாரும் என்னுடைய சொந்த ஜனங்கள். இங்கே வெளி மனிதர் என்று ஒருவருமே கிடையாது. நான் சொல்கிறேன்: அவன் ஒருவனே பூரணன்; நான் என்னை அவனது அங்கம் என ஒரு போதில் காண்கிறேன். அவனை யஜமானனாகவும் என்னை அவனது தாஸனாகவும் இன்னொரு போதில் காண்கிறேன். சில சமயங்களில் அவனே நான், நானே அவன் என உணர்கிறேன்.''

துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் எல்லாம் அற்றுப்படியாகிவிட்டனவல்லவா ?

'ஒரே இலட்சியத்தை அடையப் பல பாதைகள் உள்ளது போலவே ஒரே கடவுளை அடையப் பல மதங்கள் உள்ளன' என்பார் பரமஹம்ஸர்.

கடவுளுக்கு உருவம் உண்டு என்னும் மதங்களும் உண்மை; கடவுள் அருவமானவர் என்ற மதங்களும் உண்மையே என்பார். 'சாதகன் ஆத்மாநுபவத்தில் உருவமில்லாதவனாக உணரும் அவனே ஆலி பனிக்கட்டியாவது போல், பக்தனின் அன்பில் இறுகி உருவமும் தரித்துக் கொள்கிறான். அவனை வார்த்தைகளால் விளக்க முடியாது. புத்தகத்தின் இரண்டு அட்டைகளுக்குள் புகுத்த முடியாது. கோயிலின் பிராகாரங்களுக்குள் கட்டுப்படுத்த முடியாது' என்பார். உடனே காளி மாதாவின் கோயிலுக்குச் சென்று பூஜித்துப் பரவசமடைவார்.

விக்கிரக ஆராதனை சரியா தப்பா என்று கேட்பதெல்லாமே பைத்தியக்

காரத்தனம் என்பார். உலக ஆசைகளை மறந்து, கடவுளை எண்ணுவதற்கு உதவுவது எல்லாமே சரிதான் என்பார். 'ஆர்வத்துடன் எப்படி வேண்டுமானாலும் வழிபடுங்கள்; எந்தப் பிரார்த்தனையை வேண்டுமானாலும் சொல்லுங்கள்; ஈசுவரனுக்கு ஓர் எறும்பு அடி எடுத்து வைக்கும் ஓசை கூடக் கேட்கும்' என்பார்.

பெண்ணாசை, பொன்னாசை இவற்றை விலக்க வேண்டும் என்பதை அடிக்கடி கூறுவார் ராமகிருஷ்ணர். காமினி, காஞ்சனம் என்று இவற்றை அவர் குறிப்பிடுவார். சீடர்கள் பொருளாசையை விலக்கவேண்டும் என்பதற்காகவே தாம் பொருளைக் கண்டால் வெறுத்தார். 'ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவரறியாமலே பணத்தை ஸ்பரிசித்தாலும்கூட உடல் பதறியது ஏன்? எதனிடமும் விருப்பு வெறுப்பு பாராட்டக் கூடாத ஜீவன் முக்தருக்குப் பணத்திடம் மட்டும் ஏன் அத்தகைய வெறுப்பு ஏற்பட வேண்டும்?' என்று சிலர் கேட்பதுண்டு. ராமகிருஷ்ணர் போன்ற ஆசாரிய புருஷர்கள் தங்களுக்காக மட்டும் வாழ்ந்து கொள்ளவில்லை. இன்னும் சொல்லப் போனால் தங்களுக்காகவே அவர்கள் வாழ்ந்து கொள்ளவேயில்லை. பிறருக்கு வழி காட்ட வேண்டிய பெரிய பொறுப்பு அவர்களுக்கு உண்டு. அதனாலேயே தங்களிடம் இல்லாத குறைகளைக் கூடத் தங்கள் மீது அவர்கள் சுமத்திக்கொள்



வார்கள். அவர்களின் உச்சமான அநுபவ நிலையிலிருந்து பார்க்கும் போது குறைகளாகத் தோன்றுபவையும் பாமரர்களுக்குப் பயனுள்ளனவாகும். இவ்வாறு பிறருக்கு வழிகாட்டுவதற்காகத்தான் பரமஹம்ஸர் திரவியத்தைக் கண்டு வெறுத்து, அந்த வெறுப்பையே தம் உடலின் இயல்பாக்கிக் கொண்டார்.

'மனிதன் பாபத்தில் பிறந்தவன்' என்ற கிறிஸ்துவ சமயக் கோட்பாட்டை பிரம்ம சமாஜத்தினர் ஏற்றுக்கொண்டிருந்தார்கள். ஆனால் பரமஹம்ஸரின் ஆத்மிக அகராதியிலோ பாபம் என்ற பதமே கிடையாது. 'மனிதன் ஒரு சில கட்டுப்பாடுகளுடன் பிறந்திருப்பது உண்மைதான். ஆனால் இந்தக் கட்டுப்பாட்டையே எண்ணி, பாபத்தில் பிறந்தோம் என்று துயருறுவானேன்? எந்தக் கட்டுப்பாடும் அறியாத பூரண சுதந்திரத்தைப் பெற்று ஆனந்தமாகும் உபாயம் ஆத்மாவுக்கு இருக்கிறது. கட்டுப்பாட்டைமறந்து சுதந்திரத்தை எண்ணி, சுதந்திரத்துக்காகப் பாடுபடலாமே' என்பதுதான் பரமஹம்ஸரின் கருத்து.

நரேந்திரர் ஹிந்துவாகிச் சாதனைகளைத் தொடங்கினர். தியானம், பிரார்த்தனை, வேதாந்த விசாரம் என்று காலம் பயனுள்ளதாகக் கழிந்து வந்தது. குருவின் அநுபவங்கள் சிஷ்யருக்குள் பாயத் தொடங்கின.

நரேந்திரருக்கு இப்போது சில விசித்திரமான அநுபவங்கள் கிட்டின. அவர் வீட்டுக்குச் சென்றாலும் அவர் கண் முன் பரமஹம்ஸர் தோன்றிக் கொண்டே யிருப்பார். தியானம் புரியும் போதெல்லாம் காட்சி தந்த குருநாதர் ஒரு நாள் நரேந்திரரின் கனவிலும் தோன்றினர்.

"வா, வா, உனக்கு ராதா தேவியைக் காட்டுகிறேன்" என்றார் பரமஹம்ஸர் நரேனிடம்.

நரேந்திரர் அவரைப் பின்தொடர்ந்து சென்றார்.

சிறிது தூரம் சென்றவுடன் குருநாதர் அவர் பக்கம் திரும்பி, "நீ இன்னும் எங்கேயோ ஏன் போக வேண்டும்?" என்று கேட்டார். கேட்டவாறே — ஆகா, அதென்ன விந்தை — ஸ்ரீ ராமகிருஷ்ணரே அன்பில் உருவான அழகுப் பெட்டகமாகிய ராதாதேவியாக மாறி விட்டார்!

"ராதை நிஜமாக இருந்தவளா?" என்று பரமஹம்ஸரிடமும் சம்சயம் தெரிவித்திருந்த நரேந்திரரின் சஞ்சலம் நீங்கியது. 'ராதை நிஜமானாலும் இல்லாவிட்டாலும் அவளுடைய ஆர்வத்தை நாம் மெய்யாக்கலாமே!' என்று கூறியிருந்த குருநாதர் அதை மெய்யாக்கி விட்டார். ஜீவாத்மா பரமாத்மாவிடம் கொள்ளக் கூடிய புனிதமான அன்பைப் புரிந்து கொண்டார் நரேந்திரர். ராதையின் மீது உளமுருகப் பாடினர். ராதையின் உள்ளத்தில் உறைந்த மனமோஹனை கிருஷ்ணனை நாவாரப் பாடிக் களித்தார்.

இன்னொரு விநோத அநுபவம்:

நரேந்திரர் தியானம் புரிகையில் தம்முடைய அச்சாக இன்னொரு நரேந்திரரும் தியானம் புரிவதாக அவருக்குத் தோன்றும். உயரம், பருமன், நிறம், உடை எல்லாம் தத்ரூபம் நரேந்திரராகவே இருக்கும் அந்த இன்னொருவருக்கு. தியானத்தை நிறுத்தி விட்டு அவர் எந்தச் செய்கை செய்தாலும் அந்த மாற்று 'நரேந்திரர்' உடனே கண்ணாடிக்குள் தெரியும் பிம்பம் போல அதே செய்கைகளைப் புரிவார்.

இதைப் பற்றிக் குருமஹராஜிடம் கூறினர் நரேந்திரர். "தியானத்தின் முதிர்ந்த நிலைகளில் நேரும் சம்பவமே அது" என்று கூறிப் பேச்சைச் சட்டென்று மாற்றி விட்டார் குரு.

சாதகனுக்கு அந்த மாற்று ஆள் எப்படியோ அதே போலத்தான் பரம்பொருளுக்குச் சாதகன் ஒரு பிரதிபிம்பம் என்பது பொருளா?

நித்யகோபால், மனோமோஹன் முதலிய மற்ற சிஷ்யர்களைப் போலத் தமக்கு எளிதில் ஆவேசமும், பரவசமும் வரவில்லையே என்று ஒரு சமயம் நரேன் வருந்தினர்.

"குழந்தாய், இதற்காகக் கலங்காதே" என்றார் பரமஹம்ஸர்.

"இதனால் என்ன கெட்டுப் போச்சு? மத்தகஜம் பிரவேசித்தால் குட்டை குழம்பி அமளி துமளியாகிறது. ஆனால் அதே கஜம் கங்கா பிரவாகத்தில் புகுந்தால் கங்கை குழம்பி விடுகிறதா என்ன? தெய்விக அன்பு என்ற மகத்தான சக்தியின் ஓர் அம்சம் இவர்கள் மனசின் சிறு எல்லைக்குள் வந்தாலும் அதனை அடித்துப் புரட்டி விடுகிறது. ஆனால் நீ மஹா நதி யல்லவா?" என்று தேற்றினர் கருணைநதி.

எல்லாப் பெண்களையும் தாயாகக் காண்பது பற்றிப் பரமஹம்ஸர் கூறியது நரேந்திரரின் அநுஷ்டானத்தில் படிந்து விட்டது.

ஒரு நாள் நரேந்திரரின் பணக்காரச் சிநேகிதர்கள் சிலர் அவரைக் கல்கத்தாவின் புற நகரங்களில் உல்லாஸமாகப்

புதிய,நறுமணம் குன்றாத பாக்கெட்டுகளில் கிடைக்கிறது —

# மூடிஸ் டீ

நீங்கள் விரும்பி அனுபவிக்கும்

**மிகுந்த நறுமணம்...**







உண்மையிலேயே கடைசித்துளிவரை

**நல்ல ருசியுள்ளதா யிருக்கிறது...**




ருசி, நிறம், சக்தி

**இவற்றில் இணையற்றது...**




**உங்கள் பணத்தை மிச்சப்படுத்தும் வகையில்,**

கூடுதலான கோப்பைத் தேனீர் பெறுகிறீர்கள்...

**மூடிஸ் டீ** — நாற்பது வருஷங்களுக்கு மேலாக புகழ் வாய்ந்தது!...

பொழுதைக் கழிக்க அழைத்தனர். அந்த 'உல்லாஸம்' என்ன என்பதை யறியாத அப்பாவி நரேந்திரர் சந்தோஷத்துடன் அழைப்புக்கு இணங்கினார்.

மாளிகைத்தோட்டமொன்றில் நடைபெற்ற விருந்தில் எல்லாரும் உண்டார்கள். நரேந்திரரும் உண்டு களித்தார். அங்கே பாட்டு கூத்து கேளிக்கைகள் நடைபெற்றன. அவற்றையும் ரசித்தார் நரேந்திரர். சிறிது போதான பின் அவருக்கு அலுத்துவிட்டது. ஓர் அறைக்குச் சென்று ஓய்வு கொள்ளலானார். அவரைத்தனியாகக்கண்ட நண்பர்கள் நடனமாது ஒருத்தியை அவரிடம் அனுப்பி வைத்தனர்.



டிரைவர்: என்னுங்க, ரெண்டு ரூபா ஆயிருக்கு! ஒரு ரூபா தர்றீங்களே.

பிரயாணி: அடடா! எங்கிட்ட ஒரு ரூபாய்தானே இருக்கு! தயவுபண்ணி என்னைப் பாதி வழியிலே கொண்டு போய் விட்டு விடேன்.

குழந்தை போல அவனிடம் பேசலானார் நரேந்திரர். அவளும் அவரிடம் தனது துர்ப்பாக்கியங்களையெல்லாம் எடுத்துரைக்கலானாள். மிகவும் அக்கறையுடனும் அநுதாபத்துடனும் அவர் கேட்டுக் கொண்டிருந்தார். அந்த அக்கறையையும் அநுதாபத்தையும் அவள் தவறாகப் புரிந்து கொண்டு விட்டாள். தன் இதயத்திலிருந்த இச்சையை அவரிடம் பச்சையாகக் கொட்டி விட்டாள்.

உடனே நரேந்திரரின் மனக் கண் முன்பு குருநாதர் தோன்றினார்; பவதாரிணி தோன்றினாள். நடுநடுங்கிப் போன அவர் சட்டென எழுந்தார்: ''மன்னித்துக் கொள் அம்மா, நான் அவசரமாக வெளியே போக வேண்டும். உன்னிடத்தில் எனக்கு உண்மையான அநுதாபம் உள்ளது. நீ நன்றாக வாழ வேண்டும் என்று நான் பிரார்த்திக்கிறேன். இப்போது நீ வாழுவதுபோல வாழுவது பலவீனமாகும் என்று நீஅறிந்தாயானால், என்றோ ஒரு நாள் அதிலிருந்து நீ விடுபடுவாய்'' என்று அவளிடம் கூறிவிட்டு நடையைக் கட்டினார்.

அந்தப் பெண் நரேந்திரரின் நண்பர்களிடம் திரும்பிச் சென்று, ''ரொம்ப நன்றாயிருக்கிறது உங்கள் தமாஷ்! 'சன்னாசி' ஒருவரிடம் போய் என்னை அனுப்பி வைத்தீர்களே'' என்று கடிந்து கொண்டாளாம்!

குருநாதர் தம்மைக் கட்டிக் காத்து ஆதரிக்கத் தொடங்கி விட்டார் என்றநிச்சய புத்தி நரேந்திரருக்கு உண்டாகி விட்டது. நரேந்திரரின் எதிர்காலத்தைப் பற்றி முக்காலமும் உணர்ந்த குருமஹராஜ் கூறியவை அவருக்கு நம்பிக்கையும் பலமும் அளித்தன. எப்போதுமே தமது எதிர்காலம் ஏனையோருடையதைப்போலன்றி தனித் தன்மை பெற்று விளங்கும் என்று உள்ளுணர்ச்சியால்அறிந்த நரேந்திரர் இப்போது தம்மால் ஆக வேண்டிய மகத்தான பணியொன்று உள்ளது என்று மேலும் திடமாக நம்பலானார். தம்மை ஆத்மிகத்தில் வளர்த்துக் கொண்டார்.

நரேந்திரரின் ஆத்மிக வளர்ச்சி ஒருபுறமிருக்கட்டும். அவரது உடலும் அதனுள் குடி கொள்ளும் உயிருக்கேற்றதாகப் பொலிந்து வளர்ந்து வந்தது.

ஜீவத் துடிப்பு ததும்பும் திருஉருவம் நரேந்திரருடையது. நடுத்தர உயரம் என்பதற்குச் சிறிது அதிகமாகவே, ஐந்தடி எட்டங்குலத்துக்கு, நடுத்தரப் பருமன் என்று சொல்வதற்குச் சற்றுக் கூடுதலான புஷ்டியுடன் விளங்கினார் நரேந்திரர். சரக்கொன்றையில் சந்தன நிறம் பிரதிபலித்தாற் போன்ற தங்கப் பழுப்பு வண்ணம். விரிந்த தோள்கள்; பரந்த மார்பு. பரந்து விரிந்த நெற்றி. அந்த நெற்றியின் அழகுக்குக் குறையாத முகம். அந்த முகத்தில் அழுத்தத்தோடு நளினமும் கலந்திருக்கும். பெண்மை என்று சொல்லி விட முடியாத ஒரு மென்மை அதில் சுகமாகக் கலந்திருக்கும். அவரது நயனங்கள் தனி எழில் பெற்றவை. 'யோகியின் கண்கள்' என்று தேவேந்திரநாத டாகூர் வருணித்த அக் கண்கள் தாமரை இதழ் போல் விசாலமாக விளங்கியதால் பரமஹம்ஸர் நரேனை 'கமலாக்ஷன்' என்றும் அன்போடு அழைப்பதுண்டு. அந்த நேத்

திரங்களில் ஞானப்பிரகாசமும், கருணை யின் தன்மையும் கலந்து காணும். நரேந்திரரின் உணர்ச்சிகளைப் பளிங்கு போல் பிரதிபலிக்கும் அந்தக் கண்கள் பரவசத்தில் சொருகிக் கொள்வது ஓர் அழகு எனில் குறும்பில் மின்னுவது இன்னோர் அழகாகும். நரேந்திரரின் குரல் தேனின் மதுரம் பொருந்தியது. நரேந்திரருடைய அழுத்தமான முக வாய் அவரது திட சங்கல்பத்தைக் காட்டுவதாக அமைந்திருந்தது. எப் படிப் பேசுவது என்பதற்கு ஓர் எடுத் துக்காட்டு அவர் பேசும் விதம். அவர் ஒருவரிடம் பேசுகிறார் என்றால், அந்த ஒருவரைத் தவிர இந்தப் பிரபஞ்சத் தில் வேறு எதுவுமே அல்லது யாருமே இல்லை என்பது போல ஒருமுகப்பட் டுப் பேசுவார். அவருடைய கண்களின் காந்தமும், சொல்லின் காந்தமும், அந் தக் கண்களைப் பார்ப்பவர்களுக்கு அல் லது அந்தச் சொல்லைக் கேட்பவர்களுக்கு அந்தக் கண்களையோ சொல்லையோ தவிர உலகில் வேறு எதுவும் இல்லை என்ற எண்ணத்தையே உண்டாக்கும்.

இப்படி அவர் ஐக்கியமான பாவத் துடன் உரையாடுவதால், அவரோடு உரையாடுபவர்கள் தங்கள் உள்ளத் தில் இருப்பதையெல்லாம் அவரி டம் கொட்டி விடுவார்கள். இதனால் நரேந்திரர் கடற்பஞ்சைப் பிழிவது போல எதிராளியின் சரக்கையெல் லாம் பிழிந்து எடுத்துக் கொண்டு விடு வார் என்று எண்ணிவிட வேண்டாம். புஷ்பத்தை மலரச் செய்யும் சூரியன் அந்தப் புஷ்பத்தின் சத்தையெல்லாம் உறிஞ்சிக்கொண்டு அதை வாட வைக் கிறான் என்று யாரேனும் சொல்வார் களோ? அவர் மற்றவரிடமிருந்து எடுத் துக் கொள்வதைவிட அவர்களுக்குக் கொடுப்பதே அதிகம்.

வாட்டசாட்டமான அவரது உட லில்தான் என்ன காம்பீர்யம்! என்ன இயல்பான கௌரவம்! அந்தக் கௌரவ மும் காம்பீர்யமும் மனிதப் பண்பில் குளித்துக் குழந்தையின் குதூகலமும், குருநாதனின் கருணையுமாக மிளிரும்.

சகாக்கள் தமக்கு மரியாதை செலுத் திப் பணியும் பாங்கில் சிம்மமாக இருந்த நரேன் சகாக்கள் யாருமே தேவையில்லை என்பது போல ஏகாந்தத்தை நாடிச் செல்லும் பொழுதுகளும் உண்டு. வேக மும் பொறுமையின்மையும் கொண்டு படபடக்கும் நரேந்திரர் உச்சி மீது வானிடிந்து வீழுகின்ற போதிலும் கலங்காமல் சாந்தி மயமாகவும் இருப் பார். வாழ்க்கையில் அவர் சமாளிக்க வேண்டியிருந்த இன்னல்களால் இரும் பாகப் போய் விட்டாற் போலத் தோன் றும் அவரது இதயம் வெண்ணெயாகக் கரைந்து போக எப்போதும் தயாரா யிருந்தது. நரேந்திரர் எத்தகைய குணங் கள் பொருந்தியவர் என்று வரையறுத் துப் புரிந்து கொள்வது முடியாத காரிய மாகும். அவரே சொல்வார்: "என்னை யாரோ புரிந்து கொள்ள வேண்டுமென நான் ஏன் எதிர்பார்க்க வேண்டும்? என்னிடம் யாரும் அன்பு கொண் டால் அதுவே போதும். போயும் போயும் நான் யார்? சர்வேசுவரிக்குத் தான் தெரியும். அவள் தன் காரி யத்தை எப்படியோ செய்து கொள் வாள். நான் ஏதோ இன்றியமையாத வன் என்று ஏன் எண்ணிக் கொள்ள வேண்டும்?"

அறிவால் மட்டும் வளர முயன்ற நரேந்திரருக்கு வறுமையின் கொடுமை தான் உணர்ச்சியின் முக்கியத்து வத்தை எடுத்துரைத்தது. நரேந்திரர் வறுமையைக் கண்டிராவிடில் வேறு எப்படியோதான் உருவாகி யிருப்பார் என்று பரமஹம்ஸர் கூறுவதுண்டு. "சுக போகங்களை மட்டுமே அவன் கண்டிருந் தால் அவன் பெரிய தேசத் தலை வனாகவோ, பிரசங்கியாகவோ, சீர் திருத்தவாதியாகவோ ஆகியிருப்பான். ஏழைமைதான் ஏழையரிடம் அநுதாபப் படும் உணர்வை அவனுக்கு அளித்தது" என்று அவர் சொல்வார்.

இப்படிக் கூறிய போதிலும் நரேந் திரரின் வறுமை நீங்காதா என்று வருந்தவும் செய்தார் ஸ்ரீ ராமகிருஷ் ணர். ஒரு நாள் தனிகரான ஒரு பக்தர் வந்திருந்தார். அப்போது ராமகிருஷ் ணர் அவருக்கு நரேந்திரரின் இன்னலை எடுத்துச் சொல்லி உதவி கேட்டார். தனிகர் போனபின் "எதற்காக நீங்கள் யாரிடமெல்லாமோ என் இல்லாமை யைப் பற்றிப் பேசுகிறீர்கள்?" என்று குருவைக் கடிந்து கொண்டார் சீடர். "நரேன், உனக்காக நான் எதையும் செய்வேன் என்பதை நீ அறிவாயா? உனக்காக நான் வீடு வீடாக ஏறிப் பிச்சை கேட்கக்கூடத் தயார்" என்று கூறிப் பொல பொல வென்று கண்ணீர் பெருக்கினார் குருநாதர். நரேந்திரர் நெகிழ்ந்து விட்டார்.

வெகு காலம் கழித்து ஒரு முறை விவேகாநந்தர் கூறினார்: "அவர் தம் முடைய மகத்தான அன்பினால் என்னை அடிமைகொண்டு விட்டார் என்பது உண்மை."

(தொடரும்)

**பாலின்** குணங்கள் அடங்கியது...

CFY-8-TAM




## காட்பரீஸ் மில்க் சாக்கலேட்

**மிட்டாய் மட்டுமல்ல ... ஒரு உணவும் கூட!**

# சேவல்

வியார்ஜி



ஒரு கொத்து கொத்துவதும், 'வெடுக் வெடுக்' என்று தலையை இப்புறமும் அப்புறமும் திருப்புவதுமாக இரையோடு சோம்பேறித்தனத்தையும் கலைத்துக் கொண்டே நடை போட்டது சேவல். தளதளப்பான நல்ல சதைப் பிடிப்புள்ள கொண்டை; தலைப்பில் சற்றே மடிந்திருந்தது. உடலில் நல்ல வாளிப்பு. நல்ல உயரம். அது கம்பீரமான சேவல்தான்!

தெருக் கூட்டும் குப்பைக்காரி 'புசுக்' என்று கொத்தாக வெற்றிலைச் சாற்றை உமிழவும், சேவல் 'கொக்' கொக்' என்று நீளக் குரல் கொடுத்துக் கொண்டே எட்டி நடை போட்டது.

தென்னை மரத்தை வளைத்து அணைத்துக் கொண்டு ஓடியது சாக்கடை. கரையில் வாரிப் போடப்பட்ட சாக்கடைச் சேறு ஈரம் வடியாமல் பளபளத்தது. அருகில் இருந்த 'பொத பொத' வென்று கால்கள் இறங்கும் மண்ணில் அகர வேகத்தில் கால்களால் மாற்றி மாற்றிக் கோடு கிழித்துக் ஓய்ந்து ஓயாமல் கொத்திக் கொண்டிருந்தது சேவல்.

நாலு முழம் தள்ளித் தெருக் குழாய். சாக்கடைக்கு ஜீவநதி அந்தஸ்து அளித்துக்கொண்டிருந்தது அதுதான்! குழாயடியில் நேரம் கழித்து எழுந்திருந்த இரட்டை மாட்டு வண்டிக்காரன் கர்ம சிரத்தையுடன் உட்கார்ந்து பல் தேய்த்துக் கொண்டிருந்தான். ஒவ்வொரு முறையும் காறித் துப்பும்போது விகாரமாகக் கத்திய அவனை அருவருப்புடன் பார்த்து முகத்தைச் சுளித்துக்கொண்டே தோசைக் கல்லைத் துடைத்தாள் முனியம்மாள்.

வண்டிக்காரன் மூக்கைப் பெருஞ் சத்தத்துடன் சிந்தி யெறிந்து விட்டு, 'ப்ளாச் ப்ளாச்' என்று முகத்தில் தண்ணீரை வாரி அடித்துக் கழுவிக் கொண்டிருந்தான். தன் உடலில் தண்ணீர் தெறிக்கவும் உடலை ஒரு முறை சிலிர்த்துக் கொண்டு சேவல் சாக்கடையில் இறங்கி, எதிர்க் கரையில் ஏறிக் காலையும் உதறிக்கொண்டு நீளமாகத் தரையில் சேற்றுக் கோலம் போட்ட வண்ணம், 'க்ளக் க்ளக்' என்று தொண்டைக்குள் குரல் எழுப்பி ஓடியது.

முனியம்மாள் தன்னுடைய தோசை அடுப்பைச் சூழச் சாணம் போட்டுத் தூய்மை செய்து வைத்திருந்த ஆடிக்கக் கோட்டையும் தாண்டி உட்புறப் பகுதியில் சேற்றடி வைத்துப் பீடு நடை போட்டது சேவல்.

முனியம்மாளுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. சேவலை உடனே அடிப்பதற்குக் கையெட்டும் தூரத்தில் கல் எதுவும் கிடைக்காதது அவளது ஆத்திரத்தை இன்னும் அதிகமாக்கியது.

வேறு வழியின்றி வறட்டி ஒன்றை விண்டு சிறு விள்ளல் ஒன்றைச் சேவல் மீது எறிந்தாள். முனியம்மாள் குறி பாடாவதிக் குறி! இலக்கு மிகச் சமீபமாக இருந்தும் அந்த வறட்டி விள்ளல் சேவலுக்கு ஒரு முழம் தள்ளிப் போய் விழுந்தது.

ஆனால் சேவல் மாய்மாலச் சேவல்! உயிரே போய் விட்டது போல் அவலமாக ஓலமிட்டுக் கொண்டே ஓடியது. குறி தப்பியும், தன்னைப் பரிகசிப்பது போல் மாய்மாலம் காட்டிய சேவலின் மீது முனியம்மாளுக்கு ஏற்பட்ட எரிச்சல் அதன் சொந்தக்காரியான சுவர்ணத்தம்மாள் மீது தாவியது.

அதைத் தொடர்ந்து வீட்டுப் பிராணிகள் வளர்க்கிறவர்களுக்கு அடிப்படையில் இருக்க வேண்டிய தகுதி அம்சங்கள் பற்றியும் அவற்றில் ஒன்றுகூடச் சுவர்ணத்தம்மாளுக்குக்



கிஞ்சித்தேனும் இல்லை என்பது பற்றியும், 'அப்படியாக்கொத்த' சொந்தக்காரியின் சேவலின் 'பொலிக' எப்படியிருக்கும் என்று ஒரு கேள்வி எழுப்பியும் ஒரு பாட்டம் பேசித் தீர்த்தாள் முனியம்மாள்.

முனியம்மாளின் குரல் தேவைக்கு மீறி ஓங்கியே யிருந்தது. அக்கம்பக்கத்துக் குடிசைக்காரர்கள் முனியம்மாளின் பிரலாபத்துக்குப் பெரிய முக்கியத்துவம் கொடுத்ததாகத் தெரியவில்லை. கூட்டிக் கழித்துப் பார்த்தால் சற்று முன்பு என்ஜின் மாதிரி மூக்கைச் சிந்திய வண்டிக்காரன் ஒருவன்தான் முனியம்மாளுடைய 'ஆடியன்ஸ்'! அவனும் செய்வதற்கு வேறு வேலை எதுவும் இல்லாததாலும், முனியம்மாள் முறுக்கி விட்ட கிராமபோன் மாதிரி பல ஸ்தாயிகளில் குரல் எழுப்பி, விழியை உருட்டிக் கைகளை ஆட்டி அபிநயிப்பதைப் பார்த்துக் கொண்டிருப்பதைக் காட்டிலும் வேறு சுவையான பொழுதுபோக்கு அந்தக் காலை நேரத்தில் கிடைப்பது அரிது என்பதை அறிந்திருந்தவன் ஆதலாலும் புன்னகை செய்து கொண்டே ரசித்துக் கேட்டுக் கொண்டிருந்தான்.

முனியம்மாளுடைய நோக்கமெல்லாம் சற்றுத் தூரத்தில் சாணி பொறுக்கிக் கொண்டிருந்த சுவர்ணத்தம்மாளின் காதில் தான் சொல்வதெல்லாம் விழ வேண்டும் என்பது தான். சூன்யத்தையே முன்னிலையாகக் கொண்டு வெளுத்துக் கட்டி விடக் கூடியவளான முனியம்மாளுக்கு, எதிரே புன்னகையுடன் ரசித்துக் கேட்கும் 'ஆடியன்'சாக ஓர் ஆள் கிடைத்து விட்டால் கேட்கவா வேண்டும்!

முனியம்மாள் எதிர்பார்த்த பலன் உடனே கிடைத்து விட்டது. சுவர்ணத்தம்மாளால் அமைதியாகச் சாணி பொறுக்க முடியவில்லை. அவள் உடலெங்கும் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. முகத்தில் ஒரு கடுகடுப்பு. முதலில் கையில் எடுத்த சாணியைச் 'சொதேர்' என்று சற்றுத் தொலைவில் கிடந்த இன்னும் சிறிது சாணி மீது எறிந்து நாலைந்து முறை மண்ணில் புரட்டி ஒன்றாகத் திரட்டிய போது அடக்கமுடியாத ஆத்திரத்தில் அவள் உதடுகள் முணுமுணுப்பதை இங்கிருந்தே பார்த்துக் கொண்டிருந்த முனியம்மாளுக்கு உடலெங்கும் ஒருவித உற்சாகமே ஏற்பட்டு விட்டது. எதிராளியை உசுப்பி விட்டு வலுச் சண்டைக்கு இழுப்பவர்களுக்கே ஏற்படும் தனியான உற்சாகம் அது!

சாணியை யெல்லாம் அவசரம் அவசரமாகத் திரட்டிக் கூடையில் போட்டுக் கொண்டு தன்னை நோக்கி விடுவிடென்று முன்னேறிவரும் சுவர்ணத்தம்மாளை ஓரக்கண்ணால் பார்த்து விட்டு அவளைக் கவனியாத பாசாங்குடன், 'எனது கோபம் நினைத்து நினைத்துக் குமுறுகிறது' என்ற பாவனையில் முனியம்மாள் தொடர்ந்து ஏதோ சொல்லிக் கொண்டிருந்தாள். அவள் கை பாட்டுக்குக் காரியங்களைத் தொடர்ந்து செய்து கொண்டே யிருந்தது; வாயோ அது பாட்டில் சற்று உரக்கவே முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

சுவர்ணத்தம்மாள் அருகில் வரவும், ''சே! என்ன ஜன்மங்கடி! எயவு ஜன்மங்க! ஒரு சூடு சொரணை இருக்க வாணும்!'' என்று முனியம்மாள் முத்தாய்ப்பு வைக்கவும் சரியாக இருந்தது.

தான் கொண்டு வந்த சாணிக் கூடையைத் தொப்பென்று தரையில் போட்டாள் சுவர்ணத்தம்மாள். முந்தானையை வரிந்து இடுப்பில் சொருகினாள். ''தே! என்னாது, அப்படிக் குடியே முழுகிப் போன மாதிரிக் கூச்சல் போடறியே! நானும் 'போவட்டும் போவட்டும்'னு 'கம்'முனு இருந்தா நாக்கு நீளுதே. உனக்குத்தான் பேசத் தெரியும்னு எண்ணிக்கினியாங் காட்டியும்! ஏதேது ரொம்பத் 'தெகிட்டல்'லேதான் இருக்காப்பல இருக்குது! தா! மறுவாடியும் சொல்றேன். இன்னொருவாட்டி என் பேச்சை எடுத்தே..... ஆமாம்.... அப்புறம்...'' இந்தச் சுவர்ணத்தம்மாள் கண்டிப்பான குரலில் எச்சரிப்பது போல் இப்படிச் சொன்னதும் முனியம்மாள் தனது இடத்தை விட்டு எழுந்தே விட்டாள்.

''அடி எம்மா! இப்ப நீ என்னன்றே! உன் சேவல் சாக்கடையிலே வியுந்து எயுந்து ஓடியாந்து நான் மொளுவி வச்சிருக்கிற இடத்திலேயெல்லாம் நாசம் பண்ணுதே ஒருநாளைப் போலே — சேவலா அது — பொறைப் பன்னி யாட்டம் அதும் உடம்பும் அதுவும் — அதுங் கயுத்தை ஒரு நாளு நான் ஒடிச்சு என் அடுப்பிலே போடற வரைக்கும் நீ இப்படித்தான் ஆட்டம் ஆடிக்கினு இருக்கப் போறே!'' முனியம்மாள் சேவலின் கழுத்தை முறிப்பது போலவே உக்கிரமான அபிநயம் செய்தாள். அப்பொழுது அவள் கண்களில் அசாதாரணமான ஒளி வீசியது.

''என்னாது? என் சேவலையா கழுத்தை முறிப்பேன்னு சொன்னே! அடிப் பாவி! என் சேவலைக் கண்டாப் பொறுக்கலே போலிருக்குது உன் கொள்ளிக் கண்களுக்கு! உன் கண்ணு அவிஞ்சுதான் போகப் போவுது'' என்று கையைச் சொடுக்கிச் சாபம் கொடுத்தாள் சுவர்ணத்தம்மாள்.



முனியம்மாள் கண் 'அவிஞ்சு' போகிறதோ இல்லையோ, அந்தச் சண்டையில் அவள் வார்த்த தோசை தீய்ந்தே போய் விட்டது! அதைச் சுட்டிக்காட்டிய வண்டிக்காரனின் ஹாஸ்ய உணர்ச்சியை அவர்களில் எவரும் புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. வெறும் தோசைத் திருப்பியை மட்டும் கையில் வைத்து இது வரையில் பேசிக்கொண்டிருந்த முனியம்மாள் இப்பொழுது அந்தத் தீய்ந்த தோசையையும் திருப்பியில் ஏற்றிக் கொண்டு அதைக் கீழேயும் போடாமல் தட்டிலும் வைக்காமல் அதை வைத்துக்கொண்டே சண்டையைத் தொடர்ந்து நடத்தியதுதான் மிச்சம்.

சுவர்ணத்தம்மாள் அங்கே அதிகம் நிற்காமல் தன்பாட்டில் ஏதோ சொல்லிக்கொண்டே தன்னுடைய குடிசைக்குள் நுழைந்தாள். தற்போதைக்குத் தன்னுடைய கையே ஓங்கியிருக்கிறது என்ற திருப்தியில் அந்த ஓங்கிய கையில் தாங்கியிருந்த தீய்ந்த தோசையை அடுப்பினுள் எறிந்து அந்த மகிழ்ச்சியைக் கொண்டாடினாள் முனியம்மாள்.

சுவர்ணத்தம்மாள் உள்ளே வந்ததன் காரணம் வீவில் வந்திருக்கும் — பட்டணத்தில் ஏதோ தொழிற்சாலை ஒன்றில் வேலை செய்யும் — அவள் பையனை அழைத்து வந்து முனியம்மாளை மிரட்டி வைக்க வேண்டும் என்பதற்காகத்தான்.

ஆனால் குடிசைக்குள் வந்து பார்த்தால் அவள் மகன் சிவா இன்னும் படுக்கையை விட்டு எழுந்திருக்கவே யில்லை. தூக்கத்திலிருந்து விழிப்புக்கு வரும் இடை நிலைச் சுகத்தைச் சுவாரசியமாக அநுபவித்த வண்ணம் படுக்கையில் புரண்டு கொண்டிருந்த சிவாவை அதட்டி எழுப்பினாள் சுவர்ணத்தம்மாள்.

''என்னம்மே! நீ ஒண்ணு! மனுசனை நிம்மதியாக் கொஞ்ச நேரம்தான் தூங்க விட்டா குடியா முழுகிடும்?'' என்று அலுத்துக் கொண்டே உடலைச் சோம்பல் முறித்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்தான் சிவா.

''அட! நீ ஒரு துப்புக் கெட்டவன்டா! உன்னாலே என்ன பிரயோசனம்? அந்தப் பொம்பிளை என்னை என்ன பேச்சுப் பேசறு பாத்தியா? நீ வந்து ரெண்டு அதட்டலு போட்டா அடங்கிப் பூடுவான்னு எண்ணிக்கினு உன்னை இட்டுக்கினு போகலாம்னு வந்தா ஐயா இன்னும் தூங்கறுரு!''

''இந்தா, நீ யாரைச் சொல்றே? விசயத்தை விளாவரியாச் சொல்லு வியா, அத்தெ விட்டுப் புட்டுப் பொம்பிளை கிம்பிளைன்னு — யாருக்குப் புரியும்?''

''எல்லாம் அந்த ஆப்பக்காரியைத்தான் சொல்றேன். அடாடாடா! அவளும் அவள் கோஷ்டமும்!'' என்று பீடிகை போட்டுவிட்டு எல்லாவற்றையும் விவரமாக மகனிடம் சொன்னாள் சுவர்ணத்தம்மாள்.

''உம், இவ்வளவு தானே! வுடு! இனிமே நான் பார்த்துக்கறேன். நான்தான் ஒரு வாரம் இருக்கப் போறேனே'' என்று ஆறுதல் சொன்னான் சிவா.

சற்று நேரம் கழித்துப் பல்குச்சியை மென்ற வண்ணம் குழாயடியை நெருங்கியவன் ஆப்பக் கடையை நோட்டம் விட்டபோது திகைத்துப் போய் விட்டான். அங்கே ஒரு 'வயசுப் பொண்'ணல்லவா உட்கார்ந்திருக்கிறாள்? நிச்சயமாக அவன் அம்மா சொன்னது இவளாக இருக்க முடியாது.

முனியம்மாளும் சுவர்ணத்தம்மாளும் இருவருமே அப்போது குப்பத்திலில்லை. கடைத் தெரு வரைக்கும் சென்றிருந்த முனியம்மாள் தன் பெண் தனபாக்கியத்தைக் கடையைக் கவனித்துக் கொள்ளச் சொல்லி விட்டுப் போயிருந்தாள்.

கடைத் தெருவிலிருந்து முன் பின்னாக வந்து கொண்டிருந்தார்கள் முனியம்மாளும் சுவர்ணத்தம்மாளும். தொலைவிலிருந்தே ஆப்பக் கடையில் சிவாவும் தனபாக்கியமும் ஏதோ பேசிக் கொண்டிருப்பது தெரிந்தது.

அருகில் வந்தபோது அவர்கள் இருவரும் மும்முரமாகச் சண்டையில் ஈடுபட்டிருப்

பதை அறிந்து இரண்டு தாயமார்களும் உள்ளுக்குள் ரொம்பவும் மகிழ்ந்து போனார்கள்.

''சரிதான் உங்கம்மா பெரிய அடாபிடிக்காரின்னு சொன்னா எங்கம்மா. இங்கே பார்த்தால்லே தெரியுது. பொண்ணுக்காரி அதுக்கு மேலே ராங்கி பிடிச்சவள் என்கிற விசயம்'' என்று சிவா சொன்ன போது தனபாக்கியத்துக்கு மகத்தான கோபம் வந்து விட்டது.

''ஓகோ! அம்மா பேச்சைக் கேட்டுக்கினு வந்துதான் இங்கே குதிக்கிறேரா ஆம்பிளே! இத்தாய்யா அம்மா புள்ளே! இந்த வேலையை எல்லாம் உங்க பட்டணத்திலே யாருனா ஏமாந்திருந்தா அங்கே போய்க் காட்டுங்க! இங்கே வாணாம். வாலே ஒட்ட நறுக்கி அனுப்பிடுவாங்க. அங் ஆம்! ஜாக்கிரதை!'' என்று நீட்டி முழக்கி எச்சரித்தாள் தனபாக்கியம்.

''சரிதான்! உன்னாண்டே என்ன பேச்சு வைச்சிருக்குது! இனிமேலுபட்டு உங்கம்மாக்காரி ஏதாவது கலாட்டா பண்ணினான்னு தெரிஞ்சுது இந்த ஆப்ப அடுப்பு கிடுப்பு எல்லாம் எகிறிப்பூடும் தெரிஞ்சுக்கோ. சொல்லிவை உங்கம்மாளாண்டே'' என்று எச்சரித்து விட்டு எழுந்தான் சிவா.

மறு நாள் காலையில் ஆப்பம் வாங்க வந்த கிராக்கிகளிடம் எல்லாம் தனது பெண்ணின் விளாசலுக்கு மிகையான வெளிச்சம் போட்டுக் காட்டி 'அந்தப் பட்டணத்து ரவுடி'யைச் செயலற்ற பெட்டிப் பாம்பாகப் படம் பிடித்துக் காட்டிப் பெருமிதமடைந்தாள் முனியம்மாள்.

இங்கே சுவர்ணத்தம்மாள் தனது மகன் 'ஆம்பிளே சிங்கம்' என்பதை நிர்த்தாரணம் செய்து, முனியம்மாளின் ஆப்பக் கடை 'எகிறி' விடும் காலம் வெகுதூரத்தில் இல்லை என்று ஜோசியம் கூறிக் கொண்டிருந்தாள்.

இப்படி இரண்டு தாய்மார்களும் தத்தம் வாரிசுகளின் பிரதாபங்களைக் கொட்டி அளந்து கொண்டிருக்கும் போதுதான் அந்த இடி போன்ற செய்தி வந்தது—சிவாவையும் தனபாக்கியத்தையும் இரண்டு பேரையுமே அந்தக் குப்பத்தில் காணவில்லை!

''கேட்டாயாம்மே சேதியை! நம்ம சுவர்ணத்தம்மாள் பையன் சிவால்லே, சிவா! அவன் முனியம்மா பொண்ணு தனபாக்கியத்தை இழுத்துக்கினு ஓடிபூட்டானாமே?'' என்று ஒருவருக்கொருவர் 'குசு குசு' என்று பேசிக் கொண்ட நிலை மாறி நேராகவே சம்பந்தப்பட்ட 'அம்மாக்காரி'களையே கேட்க ஆரம்பித்து விட்டார்கள்.

சுவர்ணத்தம்மாளுக்கும், முனியம்மாளுக்கும் இந்தச் செய்தி பேரிடியாக இருந்தாலும் அதை அவர்கள் நம்ப மறுத்தார்கள். ''என் பையனாவது அந்த மூதேவியை இட்டுக்கினு போகவாவது!'' என்று சுவர்ணத்தம்மாள் அடித்துப் பேசினாள்.

ஆனால் அவர்களின் வீறாப்பு அதிக நேரம் நீடிக்க முடியாமல் சிவாவின் சகபாடி பொன்னுசாமி 'குட்'டை உடைத்து விட்ட போது அவர்கள் முகம் தொங்கிப் போய்விட்டது. சிவா தனபாக்கியத்தைப் பட்டணத்துக்கு 'இட்டுகினு போயிருப்பது மெய்தான்' என்றும், கூடிய விரைவில் 'அவுங்க ரெண்டு பேரும் மனம் ஒப்பி வடபழனிக் கோயிலிலே தாலி கட்டின புருசன், பொஞ்சாதி ஆகப் போறாங்க' என்றும் அவன் சொன்னபோது குப்பத்து ஜனங்கள் திகைத்தனர்.

அப்பொழுதுதான் அவர்களில் ஒருத்தி. ''அடிக்கடி இதுங்க ரெண்டும் பேசிக்கினு இருக்கிறதையும் தங்கள் அம்மாக்காரிங்க தலை தெரியற சமயத்திலே மாத்திரம் உரக்கச் சண்டை போட்டுக்கிறதையும் பார்த்தப்பவே நான் இந்த மாதிரி ஏதாவது இருக்குமோன்னு சந்தேகப்பட்டேன்'' என்று சொன்னபோது சுவர்ணத்தம்மாள் - முனியம்மாள் முகங்களில் ஈயாடவில்லை.

இப்பொழுதெல்லாம் தினந்தோறும் ஆப்பக் கடை திறந்ததும் முனியம்மாள் தனக்குள்ளாகவே உரக்கத் திட்டிக் கொண்டிருப்பது 'ஓடிப் போன தொடைப்பக்கட்டை' யாகிய தன் பெண் தனபாக்கியத்தைத்தான். இந்த விவகாரத்தில் பெரிதும் நன்மையடைந்த ஜீவன் சுவர்ணத்தம்மாளின் சேவல்தான்; சாக்கடைச் சேற்றை ஆப்பம் சுடும் இடத்தில் எவ்வளவு நீற்றினாலும் இப்பொழுதெல்லாம் முனியம்மாள் விரட்டாமல் தன் பாட்டில் ஏதோ பிரலாபித்துக் கொண்டிருப்பது அதற்குப் பெரிய ஆச்சரியமாகத்தான் இருந்தது. அந்த ஆச்சரியத்தைத்தான், 'கொக்கரக்கோ' என்ற நீளக் குரல் எடுத்துத் தெரிவிக்கிறது சேவல் இப்பொழுதெல்லாம்!



# பொன் விலங்கு

மணிவண்ணன்

## ஐம்பத்தொன்றாவது அத்தியாயம்

அகங்காரத்திலிருந்துதான் வெறுப்புப் பிறக்கிறது. 'இவன் நம்மை மதிக்க மாட்டேனென்கிறானே' என்னும் காழ்ப்பினாலே அந்த வெறுப்பு வளர்கிறது. ஜமீன்தார், கல்லூரி முதல்வர், கண்ணாயிரம், எல்லாரும் சத்தியமூர்த்தியின் மேல் அளவற்ற வெறுப்புக் கொண்டிருக்கிறார்கள் என்பதைப் பாரதியும் உணர்ந்திருந்தாள். அந்த வெறுப்புக்கும் அவர்களுடைய சொந்த அகங்காரமே காரணமென்பதும் அவளுக்குப் புரிந்திருந்தது. உலகத்தின் சந்தோஷமயமான விநாடிகள் சந்தர்ப்பங்கள் எல்லாம் அன்று காலையில் சத்தியமூர்த்தியைப் போலீஸ் நிலையத்தின் அருகே சந்தித்த வேளையோடு முடிந்து போய் விட்டதாகத் தோன்றியது அவளுக்கு. அவள் வரையில் அப்படித் தோன்றியிருப்பது தான் உண்மையாக நின்றது. அந்தத் துயரத்தை அவள் இப்போது மனப்பூர்வமாக அங்கீகரித்தேயாக வேண்டும்.

அகங்காரத்திலிருந்து பிறக்கிற வெறுப்புக்கு அவளும்தான் முன்பு ஆளாகியிருக்கிறாள். சத்தியமூர்த்தி தன்னிடம் அலட்சியமாகவும், பாராமுகமாகவும் இருந்தபோது செல்வத்திலும், சீராட்டிலும் வளர்கிற எல்லாப் பெண்களுக்கும் இயற்கைக் குணமாக வந்து படிந்து விடும் ஆளவிரும்புகிற அன்பால் — அவளும் அவனை வெறுக்க முயன்று தோற்றிருக்கிறாள். ஆற்றாமையும், ஏமாற்றமும் அவள் இதயத்தில் கூட அகந்தையைப் புகையச் செய்திருக்கின்றன. அவன் தன்னை வெறுக்கிறானோ என்ற தாழ்வு மனப்பான்மையால் தான் அவனை வெறுக்க முயன்று, அந்த முயற்சியே காதலாகப் பெருகித் தவித்திருக்கிறாள் அவள். பற்றிப் படரத் தவித்த கொடியாக அவள் அலைந்தபோது அவன் கோபுரமாய் உயர்ந்து நின்றிருக்கிறான். துன்பமும், தோல்விகளும் பட்டுப் பட்டுத்தான் மனம் மென்மையடைந்து மலர வேண்டும். அந்த மலர்ச்சிக்குப் பின்போ பிறருக்கு விட்டுக் கொடுப்பதென்பது கடினமாகத் தோன்றுவதே இல்லை. துன்ப வயப்பட்டால்தான் இதயம் மெதுவாகும்; இளகும்; தான் என்ற அகந்தையும் ஒழியும். தந்தையின் அகால மரணம் அவளைத் தனிமையோடும், துயரத்தோடும் நிறுத்தி விட்டது. அந்தப் பெரிய துயரத்தில் நடுவே வந்து மனத்தை மறைத்துக் கொண்டிருந்த சிறிய அகந்தை சென்றொழிந்து விட்டது. அவளுடைய மனத்தில் உண்மை அன்பின் பரிசுத்தமான தேவையே ஓர் ஏக்கமாக வந்து நிற்கிறது இப்போது. 'அதெல்லாம் நிர்வாக விஷயம்! நீ ஒன்றும் தலையிடாதே!' என்று ஜமீன்தார் சீறி விழுந்து அவளை மிரட்டியிருந்தாலும் அவளுடைய மனம் சத்தியமூர்த்தியின் வெற்றிக்காகத்தான் இன்னும் ஏங்கிக் கொண்டிருந்தது. சத்தியமூர்த்தியை யாரோ நண்பர்கள் ஜாமீன் கொடுத்துப் போலீஸ் நிலையத்திலிருந்து அழைத்துச் சென்றார்கள் என்பதையும் அப்போது மாணவர்களின் பெருங் கூட்டம் அனுதாபத்தோடு அவரைச் சூழ்ந்தது என்பதையும் டிரைவர் முத்தையா தானாகவே வந்து தெரிவித்தபோது அவள் மனத்துக்கு ஆறுதலாயிருந்தது. வேலைநிறுத்தம் தீவிரம் அடையவும் கண்ணாயிரமும், முதல்வரும் பதறிச் சர்க்கிள் இன்ஸ்பெக்டரைத் தேடிக் கொண்டு போனதையும், ஜமீன்தாரும் நிர்வாகி என்ற முறையில் மாவட்டக் கலெக்டருக்கு

டெலிபோனில் தகவல் தெரிவித்ததையும் அதே வீட்டில் உடனிருந்தே கவனித்துக் கொண்டிருந்தும், ஒன்றுமே அவற்றிற் கெதிராகச் செய்ய முடியாமல் தவித்தாள் பாரதி. கருத்தழகும், காட்சியழகும் மிக்க இந்தச் சத்தியமூர்த்தி என்னும் அபூர்வமான இலட்சிய ஆசிரியர் தங்கள் கல்லூரிக்கே வேலைக்கு வந்துவிட வேண்டுமென்று வருட ஆரம்பத்திலே இன்டர்வியூவின்போது தான் காண்பித்த ஆவல் எல்லாம் இப்போது நினைவு வந்து அவளை அழவைத்தன. 'சுக துக்கங்கள் நிறைந்த இந்த வாழ்க்கையின் முடிவற்ற பாதையில் இன்னும் ஓரடி முன்னால் எடுத்து வைக்க எப்போதும் நான் தயார்'— என்பது போல் வலது பாதம் முன் இருக்க நிமிர்ந்து உட்கார்ந்து 'யாயும் ஞாயும் யாராகியரோ?' என்ற குறுந்தொகைக் கவிதையை அவர் தன் தந்தையிடம் நயமாக விளக்கிச் சொல்லியதெல்லாம் இப்போது அவளுக்கு ஞாபகம் வந்தன. பழைய ஞாபகங்களாலும், தந்தையை இழந்த பரிதாப நினைவுகளாலும் தன்னுடைய ஆசைகளை யெல்லாம் கொள்ளை கொண்ட இலட்சிய ஆசிரியருக்கு வந்துவிட்ட துன்பங்களை எண்ணி வருந்தும் வருத்தத்தாலும் நெடுநேரம் மௌனமாய் அறைக் கதவைத் தாழிட்டுக் கொண்டு கண்ணீர் பெருக்கிய வண்ணம் இருந்தாள் அவள். மாணவர்கள் எந்த விஷயத்தையும் சுயமாகச் சிந்தித்து எதிர்கொள்ளத் தயாரா யிருக்க வேண்டும் என்ற கருத்தை வற்புறுத்துவதற்காகச் சத்தியமூர்த்தி தன் வகுப்புக்களில் அடிக்கடி விளக்கமாகச் சொல்கிற உவமை ஒன்று உண்டு.

''படிப்பு வெறும் தீக்குச்சியைப் போன்றதுதான். எந்தப் பிரச்னையோடு உராய்ந்தாலும் அப்படி உராய்வதன் காரணமாகவே சிந்தனைச் சுடர் புறப்படுகிறது. 'அறிவுப் புரட்சி' என்பது புத்தக அறிவை எல்லா இடங்களிலும் பரப்பிவிட முயல்வது மட்டுமன்று. ஒவ்வொருவருடைய கஷ்ட நஷ்டங்களையும் மற்றொருவர் அறிந்து உணர்ந்து மனம் நெகிழுகிற சூழ்நிலையை உண்டாக்கி விட்டாலே அறிவில் புரட்சி விளைந்தாற் போலத்தான். இத்தகைய அறிவுப் புரட்சியால் சுயமரியாதைக்கும் மானாபிமானத்துக்கும் கூட இழுக்கு வர முடியாது. மானாபிமானம் என்றால் தன்மானத்தின் மேல் அபிமானம் இருந்து மட்டும் பயனில்லை. நம்முடைய எல்லா அபிமானங்களிலும் கூட மானமிருக்க வேண்டும். மானமில்லாத அபிமானங்கள் வாழ்க்கைக்கே களங்கம்'' என்பார் அவர். 'அப்படிப் பட்டவருடைய மானத்துக்குப் பங்கம் உண்டாக்கி அவமானப்படுத்திவிட வேண்டுமென்றல்லவா இந்தக் கல்லூரி முதல்வரும் ஜமீன்தாரும் இப்போது இப்படிச் சூழ்ச்சி செய்கிறார்கள்?' என்று நினைத்தபோது — அந்த நினைப்பைத் தாங்கிக் கொள்வதற்கே பொறுமையின்றி, வேதனைப்பட்டாள் அவள்.

சத்தியமூர்த்தியை அரெஸ்ட் செய்து கொண்டு போய் ஜாமீனில் விடுவித்த தினத்துக்கு மறு தினம் காலையில் கல்லூரி வேலைநிறுத்த நிலைமை இன்னும் தீவிரமாகியது. சத்தியமூர்த்திக்கு உடந்தையா யிருந்ததாகவும், வேலைநிறுத்தம் தீ வைத்தல், ஆகிய காரியங்களில் ஈடுபட மற்ற மாணவர்களைத் தூண்டியதாகவும் பொய்க் குற்றம் சுமத்தி ஏற்கெனவே வேறு காரணங்களால் அவருக்குப் பிடிக்காத சில மாணவர்களைக் கல்லூரியிலிருந்து 'டிஸ்மிஸ்' செய்திருந்தார் முதல்வர். நோட்டீஸ் போர்டில் இதை அறிவிக்கும் முதல்வருடைய அறிக்கை தொங்கியது. இதனால் வேலை நிறுத்த நிலைமை தீவிரமாகவே கலெக்டருக்குத் தந்திகள் பறந்தன. ஒழுங்கை நிலைநாட்டுவதற்காக மல்லிகைப்பந்தலில் முகாம் செய்து நிலைமையை நேரில் கண்டறியுமாறு அரசாங்கம் மாவட்டக் கலெக்டரைக் கேட்டுக்கொண்டிருந்தது. பெற்றோர்கள் படிப்பு வீணாகிறதே என்று கவலைப்பட்டார்கள். பெரும்பாலான பெற்றோர்களுக்குக் கல்லூரி முதல்வரும், நிர்வாகியும் தங்களது முரட்டுப் பிடிவாதத்தால் மாணவர்களின் படிப்பைப் பாழாக்குகிறார்கள் என்ற அபிப்பிராயம் வலுத்திருந்தது. சத்தியமூர்த்தி ஹாஸ்டலுக்கு நெருப்பு வைக்கும்படி மாணவர்களைத் தூண்டியதாகக் கைது செய்யப்பட்டு, ஜாமீனில் வெளிவந்திருப்பதாகப் பத்திரிகைகளில் அன்று காலை செய்தி வந்து விட்டாலும் மாணவர்கள் அந்தச் செய்தி பொய்யாகுமாறு அவ்வளவு வலுவாக ஊரில் உண்மையைப் பரப்பிக்கொண்டிருந்தார்கள். கல்லூரி முதல்வர் தனியாக நடந்து வெளியே வர அஞ்சுகிற அளவுக்கு அவரே தம்மைச் சுற்றிப் பயங்கரமானதொரு சூழலைப் படைத்துக்கொண்டு விட்டார். ஆனால் மாணவர்கள் எல்லாரும் கட்டுப்பாடாகவும், ஒழுங்காகவும் நடந்து கொண்டார்கள். தங்கள் மேலும் தங்களுடைய மதிப்புக்குரிய விரிவுரையாளர் மீதும் சுமத்தப்பட்டிருந்த பொய்ப் பழிகளை மெய்யோ எனச் சந்தேகிக்கும்படியான எந்தச் சிறிய தவறும் தங்களால் நேர்ந்து விடாதபடி ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு மிக அமைதியான முறையில்

தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்தார்கள். மானுபிமானம் நிறைந்த தங்கள் விரிவுரையாளருக்குத் தங்களுடைய ஆத்திரத்தால் மெய்யாகவே எந்தப் பழியும் வந்துவிடக் கூடாதென்பதில் அவர்கள் கண்ணும் கருத்துமா யிருந்தார்கள். முதல் நாள் ஜமீன்தார் கோபித்துக் கொண்டு சீறி விழுந்த பின்பு கல்லூரி வேலை நிறுத்தத்தைப் பற்றி அவரிடம் பேச்சை எடுப்பதையே விட்டு விட்டு உள்ளூற மனம் புழுங்கிக் கொண்டிருந்த பாரதியிடம் மறுநாள் நடுப் பகலில் ஜமீன்தார் தாமாகவே வந்து வலுவில் பேச நேர்ந்தது. ''காலையில் மதுரையிலிருந்து மோகினியும் கணக்குப்பிள்ளையும் காரில் புறப்பட்டு விட்டதாக ஃபோன் வந்தது. அவங்க இன்னும் கொஞ்ச நேரத்துக்குள்ளார இங்கே வந்திடுவாங்க..... வர்ரவங்களை நீதான் கொஞ்சம் கவனிச்சுக்கணும். நானும் கண்ணாயிரமும் பிரின்ஸிபாலை அழைச்சிக்கிட்டு காலேஜ் பக்கம் போயிட்டு வாரோம். மனுசன் பெரிய பயந்தாங் கொள்ளியா யில்ல இருக்காரு... பையன்களோட கூச்சலுக்கே நடுங்குகிற பிரின்ஸிபாலாப் பார்த்து உங்கப்பா வேலைக்கு வச்சிட்டுப் போயிட்டாரேம்மா....'' என்று மிகவும் தன்மையாகப் பேசிவிட்டுப் போகிறாற் போன்ற பாவனையில் சொல்லிவிட்டு அவர் கண்ணாயிரத்தோடு வெளியே புறப்பட இருந்தார். ஆனால் அவர்கள் புறப்படுவதற்குள்ளேயே போர்டிகோவில் கார் வந்து நின்றுவிட்டது. ஜமீன்தாரின் மேலும் கண்ணாயிரத்தின் மேலும் தனக்கு அப்போது இருந்த கோபத்தினால் மோகினியின்மேல் அசிரத்தை காண்பிக்கவில்லை பாரதி. மோகினியின் இணையற்ற நாட்டியக் கலைத் திறமையில் அவளுக்குப் பக்தியும் மரியாதையும் எப்போதுமே உண்டு. கார் வந்து நின்ற ஓசையைக் கேட்டுக் கண்ணாயிரமும் ஜமீன்தாரும் முன் பக்கத்திற்கு விரைந்தார்கள். தயங்கித் தயங்கி அவர்களைப் பின்தொடர்ந்து பங்களாவின் முகப்புக்கு வந்தாள் பாரதி. வந்து நின்ற காரிலிருந்து கணக்குப்பிள்ளை முன்னால் இறங்கிப் பின்புறத்துக் கதவைத் திறந்து விட்டதும் கீழே இறங்கிய மோகினியைப் பார்த்துப் பாரதி அப்படியே திகைத்துப் போனாள். 'வாடிக் கருத்து இளைத்து இவள் ஏன் இப்படிச் சோக ஓவியமாக இறங்கி வருகிறாள்?' என்று பாரதியின் மனம் அவளைப் பார்த்துக் கலங்கியது. காரின் அருகே வந்து நிற்கும் ஜமீன்தாரையும், கண்ணாயிரத்தையும் கவனிக்காதது போலவே அவள் நேரே தன்னை நோக்கி வருவதைப் பார்த்ததும் பாரதிக்கு இன்னும் ஆச்சரியத்தை அளித்தது. ஜமீன்தாரையும், கண்ணாயிரத்தையும், அவர்கள் அங்கு வந்து நிற்பதைத் தெரிந்துகொண்டும், ஓரளவு அலட்சியமாகவும், வெறுப்புடனும், தான் பார்க்க விரும்பாதது போல் அவள் புறக்கணித்துவிட விரும்புவதாகத் தோன்றியது பாரதிக்கு. 'ஏதோ நானும் இங்கு வந்து சேர்ந்து விட்டேன்' என்று வேண்டா வெறுப்பாகச் சோர்ந்த பாவனையில் மோகினி காரிலிருந்து இறங்கி நடைப் பிணமாக நகர்ந்து வருவது போலவும், முன் நோக்கிக் கால் எடுத்து வைக்கிற ஒவ்வோர் அடியையும் யோசித்துக் கொண்டே எடுத்துவைப்பது போலவும் தோன்றியது பாரதிக்கு. மோகினியின் அழகையும் எடுப்பான தோற்றத்தையும் பற்றிப் பாரதிக்கு அவளைச் சந்தித்த முதல் நாளிலிருந்து அந்தரங்கமாக ஒரு பொறாமை கூட உண்டு. எப்போதோ சில ஆண்டுகளுக்கு முன்பு மஞ்சள்பட்டி ஜமீன்தாரோடும், கண்ணாயிரத்தோடும் அப்பா மதுரையில் தங்கி யிருந்தபோது மோகினியின் இணையற்ற நடனத்தையும், அவளையும் பாரதி அறிமுகம் செய்துகொண்டிருந்தாள். அதற்குப் பின் இரண்டோர் ஆண்டுகளில் மஞ்சள் பட்டி அரண்மனை நவராத்திரி விழாவில் அவளுடைய நடனத்தைக் கண்டு வியந்திருக்கிறாள். அவளிடமோ, அவள் தாயிடமோ தானும் பரத நாட்டியம் கற்றுக்கொள்ள வேண்டுமென்ற ஆசை கூடப் பாரதிக்கு இருந்ததுண்டு.

கார் காலத்து முல்லைக் கொடி சிரித்துக்கொண்டு நடந்து வருவது போல் நடப்பதே ஓர் அழகு நடனமாய் வருகிற மோகினியை முன்பு பல முறை மதுரையில் நாட்டிய மேடைகளில் அவள் பார்த்திருக்கிறாள். அழுதழுது கலங்கிச் சிவந்த கண்களும், கலைந்து முன் நெற்றியிலும், காதோரமும் சுழலும் தூசி படிந்த கூந்தலும், தளர்ந்த நடையுமாகத் தனக்கு முன் இப்போது வந்து நின்ற மோகினியைப் பார்த்ததும் திகைப்பி

### பொன் விளக்கு

படிப்பு வெறும் தீக்குச்சியைப் போன்றதுதான். எந்தப் பிரச்னையோடாவது உராயும் போதுதான் அதிலிருந்து சிந்தனைச் சுடர் புறப்படுகிறது.

# வீட்டிற்கு தேர்ந்தெடுக்க மிகச் சிறந்தது




எல்லாவற்றிற்கும் மேலாக, ஒரு அழகான வீட்டிற்கு தேவையானது ஒரு தையல் மெஷின் ஆகும். பெண்டுகள் இப்பொழுது தைப்பதை விரும்புகிறார்கள்–அதற்கு உஷாவிற்கு நன்றி. தைப்பதை இன்பமுள்ளதாக்க, இந்த நவீன சிறந்த ரக உஷா தையல் மெஷின்கள், பல கால ஆராய்ச்சியையும், அனுபவத்தையும் சேர்த்து செய்தவைகள். உங்கள் வீட்டிற்கு ஒரு உஷா தையல் மெஷினைத்தந்து உண்மையான மதிப்பை கொடுங்கள்.

தவணைகளாக வாங்கும் எங்கள் வசீகர முறைகளுக்கு
உங்கள் டீலரை நாடுங்கள்

சுலபமாக தையுங்கள்
உஷாவினால் தையுங்கள்

**உஷா**

U.S.A., U.K. மேற்கு ஜெர்மனி உள்பட 50க்கு மேலான ராஜ்யங்களில் பெண்மணிகள் உஷாவினால் தைக்கின்றனர்.

***ஜே எஞ்ஜினீரிங் ஒர்க்ஸ் லிமிடெட் கல்கத்தா-31***

லிருந்து விடுபட்டு அவளை வரவேற்று விசாரிக்கவே பாரதிக்குச் சில கணங்களாயின. ''அக்கா! வாருங்கள்! ஏன் இப்படி வாடிக் கருத்திருக்கிறீர்கள்? மதுரைக்கு வந்திருந்தபோது ஆஸ்பத்திரியில் பார்த்ததை விட இப்போது இன்னும் மோசமாயிருக்கிறீர்களே?'' என்று அவள் தன்னை விசாரித்ததற்குப் பதில் சொல்லாமல் ''அப்பா காரியம் ஆகிவிட்டது போலிருக்கிறதே?'' என்று பாரதியிடம் அவள் தந்தையின் மரணத்துக்குத் துக்கம் விசாரித்துக் கொண்டு கண்கலங்கி நின்றாள் மோகினி. அவளுக்குப் பின்னால் காரிலிருந்து வீணையும் கையுமாக இறங்கி வந்த கணக்குப்பிள்ளையை ஜமீன்தாரும், கண்ணுபிரமும் நடுவில் வழி மறித்துப் பேசிக் கொண்டு நின்றார்கள். கணக்குப்பிள்ளையிடம் ஏதேதோ பேசிய பின் பாரதியும் மோகினியும் நின்று கொண்டிருந்த இடத்துக்கு வந்து ஜமீன்தாரும் கண்ணுபிரமும் ''பிரயாணம் நல்லாயிருந்ததா? உடம்பெல்லாம் சௌக்கியம்தானே?'' என்று அக்கறையாக விசாரித்தபோது கூடக் குனிந்த தலை நிமிராமல் அப்படியே கடுமையாக இருந்துவிட்டாள் மோகினி. அவள் அப்படிப் பதில் சொல்லாமல் தன்னை அலட்சியம் செய்துவிட்டதில் ஜமீன்தாருக்குச் சொல்லவும் முடியாமல், மெல்லவும் முடியாமல் ஊமைக் கோபம் மூண்டிருக்க வேண்டும் என்பதை அவர் முகம் கடுமையாக மாறியதிலிருந்தே பாரதி புரிந்துகொண்டாள். ''ஏன் ஐயா அப்பிடியே மலைச்சுப்போய் நிற்கிறீங்க? காருக்குள்ளார இருக்கிற சாமான்களை எல்லாம் ஒண்ணொண்ணா எடுத்து வைக்கிறதுதானே?'' என்று டிரைவரிடமும் கணக்குப்பிள்ளையிடமும் எரிந்து விழுவதன் மூலம் ஜமீன்தாருடைய அந்தக் கோபம் வெளிப்பட்டுத் தீர்ந்தது. இரண்டாவது தடவை ஜமீன்தார் சிறிது கடுமையாகவே, ''இந்தா மோகினி! உன்னையெத்தான் கேக்குறேன். பதில் சொல்றத்துக்கு என்ன? உடம்புக்குச் சுகந்தானே? பிரயாணத்துலே ஒண்ணும் கொறைவில்லையே?'' என்று கேட்டபோது முன்போலவே நிமிர்ந்து பாராமல் ஆனால் தலையை மட்டும் மெல்ல அசைத்தாள் மோகினி. அவள் முகத்தில் அப்போதும் மலர்ச்சியோ சிரிப்போ இல்லை என்பதைப் பாரதி கூர்ந்து கவனித்தாள்.

''உடம்புக்கு இதமா நல்லா வெந்நீர் வச்சுத் தரச் சொல்லிக் குளி. சாப்பிடு. 'ரெஸ்ட்' எடுத்துக்க'' என்று மோகினியிடம் சொல்லிய பின் பாரதியின் பக்கம் திரும்பி, ''நீ பார்த்துக் கவ



முதல் நண்பர்: நான் சினிமா, நாடகம், பரத நாட்டியம் எல்லாத்தையும் பார்க்கிறதை விட்டுட்டேன்.

இரண்டாம் நண்பர்: ஏன் விட்டீங்க?

முதல் நண்பர்: கையிலே பணம் இல்லே....!

னிச்சுக்கம்மா! சும்மா நிற்கிறியே?''— என்று துரிதப்படுத்திவிட்டுப் போய்ச் சேர்ந்தார் ஜமீன்தார். மோகினியோ ஜமீன்தார் போன பின்பும் நீண்ட நேரம் ஒன்றுமே பேசாமல் தலை குனிந்து மௌனமாகக் கண்ணீருகுத்துக் கொண்டிருந்தாள். பாரதியோடும் கலகலப்பாகப் பேசவோ பழகவோ முயலவில்லை அவள். ஆனாலும் பாரதி அவளை அப்படியே விட்டுவிடவில்லை.

''ஏன் அக்கா அழறீங்க...?''

இதைக் கேட்டு மோகினியின் அழுகை இன்னும் பெரிதாகியது. அழகின் அரசி போலவும் கலையின் அதிதேவதை போலவும் விளங்கும் அந்த இலட்சுமீகரமான பெண் குமுறிக் குமுறி அழுவதைப் பார்த்துப் பாரதியால் கண் கலங்காமல் இருக்க முடியவில்லை. ''நீங்கள் அழக் கூடாது அக்கா...'' என்று அவள் ஆறுதல் கூறத் தொடங்கவும், ''அழாமல் என்ன செய்யறதம்மா! நான் பிறந்த பிறப்பை நினைச்சு அழுறேன்'' என்று பதில் வந்தது மோகினியிடமிருந்து.

''மதுரையை விட்டு இங்கே வந்தது பிடிக்கவில்லையா உங்களுக்கு?'' என்று சின்னக் குழந்தை ஆறுதல் கூறுவது போல் பேதைமையாக அவளிடம் ஏதோ கேட்டாள் பாரதி.

''பிடிக்காதது ஒண்ணு மட்டுமில்லே. எத்தனையோ பிடிக்கலே... வாழ்க்கையே பிடிக்கலே... வாழ்க்கையே பிடிக்காமல் போனப்புறம் பிடிக்காததுன்னு தனியா எதைச் சொல்ல முடியும்?'' என்று மோகினி அழுது கொண்டே பதில் கூறியபோது பாரதிக்கு அந்த முடிவிலாச் சோகம் பொறுக்காமல் மனம்

நெகிழ்ந்து விட்டது. ஓர் அநாதைக் குழந்தை தற்காலிகமாகத் தான் ஓர் அநாதை என்பதை மறந்துவிட்டு இன்னேர் அநாதைக் குழந்தைக்குத் தைரியம் சொல்லி ஆறுதலாக உபசரிப்பது போல் பாரதி மோகினியை உள்ளே அழைத்துக்கொண்டு போய்ச் சமாதானப்படுத்தி முதலில் காப்பி குடிக்க வைத்தாள். அப்புறம் வெந்நீரில் குளிக்க வைத்துக் கட்டிக்கொள்ள மாற்றுப் புடைவையும் கொடுத்தாள்.

''அக்கா! உங்களுக்குத் தலைகொள்ளாமல் கருகருவென்று நிறையக் கூந்தல்! பூ வைத்துக் கொள்ளுங்கள்...'' என்று ஒரு பந்து மல்லிகைப் பூவோடு வந்து பாரதி பிடிவாதம் பிடித்தபோது மோகினி அந்தப் பூவை வைத்துக் கொள்ள மறுத்துப் பிடிவாதம் பிடித்ததுடன் எதை நினைத்தோ மறுபடியும் அழத் தொடங்கி விட்டாள். மோகினியிடம் பாரதி பூவும் கையுமாக மன்றாடிக் கொண்டிருந்த அதே வேளையில் முன் பக்கத்து அறையில் ஜமீன்தார் யாரிடமோ கோபமாக இரைந்து பேசிக் கொண்டிருப்பது கேட்டது. கோபமாகப் பேசிக் கொண்டிருந்த பேச்சு கல்லூரி வேலைநிறுத்தத்தோடு தொடர்புடைய ஏதோ ஒன்றுக இருப்பதுபோல் தோன்றவே பாரதி அதைச் செவிசாய்த்துக் கவனிக்கலானாள்.

''ஓய் கணக்குப்பிள்ளை! ஊராருக்கு அடங்காத பிள்ளையை நீரேதான் அடக்கணும். எனக்கு மாலை போடறத்துக்கு மனசு வெறுத்துப் பாதிக் கூட்டத்திலே வெளியே எந்திரிச்சுப் போனான் ஐயா அவன்! மனசிலே எத்தினி திமிரு இருந்தா அப்படிச் செஞ்சிருக்கணும்? உம்ம பையன் தான் இப்ப எனக்கு ஒன்னம் நம்பர் விரோதி ஐயா... நீர் அவனை வழிக்குக் கொண்டு வரலியோ எல்லாத்தையும் கூண்டோட தொலைச்சுத் தலைமுழுக வேண்டியதுதான்! ஜாக்கிரதை'' என்று ஜமீன்தார் இரைந்ததற்குப் பதிலாகத் தணிந்த குரலில் மதுரையிலிருந்து வந்த கணக்குப்பிள்ளை ஏதோ சொல்லிக்கொண்டிருந்தார். நடு நடுவே கண்ணுயிரத்தின் குரலும் ஒலித்தது. மதுரையிலிருந்து மோகினியை அழைத்துக்கொண்டு வந்திருக்கும் இந்தக் கணக்குப்பிள்ளையிடம் யாரைப்பற்றி எதற்காக ஜமீன்தார் இப்படி இரைந்து கொண்டிருக்கிறர் என்பது மட்டும் பாரதிக்குப் புரியவில்லை.

மோகினியை மதுரையிலிருந்து மல்லிகைப் பந்தலுக்குக் காரில் அழைத்துக் கொண்டு வரச்சொல்லி அந்தப் பேச்சியம்மன்படித்துறைக் கிழவனுக்கு டெலிபோன் செய்தபோது ஜமீன்தாருக்கும் கண்ணுயிரத்துக்கும் முன்பு தோன்ருத புது யோசனை ஒன்று இப்போது தோன்றியது. சத்தியமூர்த்தியின் தகப்பனை இந்தக் கிழவனைக் கொண்டே அவனை அடக்கி ஒடுக்க வேண்டுமென்ற யோசனையைக் கண்ணுயிரம் ஜமீன்தாருக்குத் திருவாய் மலர்ந்தருளினர்.

''அத்தனை திமிரா யிருக்கிறவன் எங்கே ஐயா தகப்பன் பேச்சுக்கு அடங்கப்போறன்?'' என்று ஜமீன்தார் தயங்கினர்.

''முயன்று பார்ப்போம். தகப்பனும் மகனுமாகச் சேர்ந்து கையெழுத்துப் போட்டு வீடு கட்டறத்துக்கு என்னிடம் நெறையக் கடன் வாங்கி யிருக்காங்க... அதையும் நினைவுபடுத்திப் பயமுறுத்திப் பார்க்கலாம். கல்லை எறிஞ்சா அப்புறம் மாங்காயோ கல்லோ எதுவேணத்திருப்பி விழுந்திட்டுப் போவுது...'' என்ருர் கண்ணுயிரம். எனவே இரண்டுபேருமாகச் சத்தியமூர்த்தியின் தந்தையை நயமாகவும், பயமாகவும் மிரட்டிப் பார்த்தார்கள். பல விதங்களில் அவர்களுக்குக் கட்டுப்பட்ட அந்த ஏழை மனிதர் தம் மகனுடைய பிடிவாத குணத்தை நன்ருக உணர்ந்திருந்தும், பணம் படைத்த அவர்களுடைய வற்புறுத்தலை மீற முடியாமல் 'அன்றே அவனைச் சந்தித்து ஜமீன்தாரிடமும் பிரின்ஸிபாலிடமும் மன்னிப்புக் கேட்கும்படி புத்தி சொல்லிப் பார்ப்பதாக ஒப்புக் கொண்டார். துணிந்து சத்தியமூர்த்தியைத் தீர்த்துக் கட்டிச் சீட்டுக் கிழித்து வீட்டுக்கு அனுப்பி விடுவது என்ற முயற்சியில் தானும் பிரின்ஸிபாலும் இறங்கி யிருந்தாலும் மாணவர்களுடைய ஆதரவு சிறிது கூடக் குறையாமல் அவன் பக்கம் இருப்பதைப் பார்த்து இப்போது ஜமீன்தாருக்குச் சிறிதளவு தயக்கமாகவும் பயமாகவும் இருந்தது. அதனால் சத்தியமூர்த்தியே தன்னிடமும் பிரின்ஸிபாலிடமும் வந்து மன்னிப்புக் கேட்டுவிட்டுப் பையன்களையும் வேலை நிறுத்தத்தை வாபஸ் வாங்கும்படி செய்கிறற் போல் அவனுடைய தகப்பனர் மூலமே ஒரு நிர்ப்பந்தத்தை அவனுக்கு உண்டாக்கி விட முடியுமானல் நல்லதென்றுதான் அவருக்குத் தோன்றியது. அப்படி நடந்தால் மாணவர்களுக்கும் அவன் மேலுள்ள பற்றுதல் குறைந்துபோகும். கோர்ட், கேஸ் என்று வளர்ந்து ஹாஸ்டலுக்கு நெருப்பு வைத்ததற்குச் சத்தியமூர்த்தியின் தூண்டுதலோ, மாணவர்களின் செயலோ காரணமில்லை என்று நிரூபணமாகி விட்டால் என்ன செய்வதென்ற பயமும் ஜமீன்தாருடைய மனத்தில் மூண்டிருந்தது. (தொடரும்)

4-29-12

# பத்தினிக் கோட்டம்

## ஜெகசிற்பியன்



அத்தியாயம் முப்பத்தேழு

### ஆதொண்டை மாலை

அளவுக்கு மீறிய பயத்தாலும், துயரத்தாலும் அழுத்தப்பட்டுப் பிரமை பிடித்தவள்போல் அப்படியே விறைத்து நின்று கொண்டிருந்தாள் உத்தமசீலி.

நீரில் நீந்திய தன் கண்களைத் துடைத்துக் கொண்டு அவள் அருகில் வந்த இளங்கோப்பிச்சி பாசப் பரிவுடன் ஏறிட்டுப் பார்த்து, ''இந்த இக்கட்டான நிலைமையிலிருந்து நாம் இருவருமே விடுபடவும், நம்முடைய காதல் எவ்விதத் தடையுமின்றி நிறைவேறவும் நான் ஓர் எளிய யோசனை சொல்வேன்; அதைக் கேட்பீர்களா, இளவரசி?'' என்று தணிந்த குரலில் வினவினாள்.

சஞ்சீவிக் காற்றைச் சுவாசித்தவள் போல் நெளிந்து நிமிர்ந்த உத்தமசீலி அவளை ஆவலுடன் நோக்கினாள்.

''வைரத்தை வைரத்தால் தான் வெட்ட வேண்டும்; முள்ளை முள்ளால் தான் கீறிக் களைய வேண்டும்; சமய வேற்றுமையைக் காட்டி உங்களது உயரிய காதலை முறிக்க முயலுவோரை அந்தச் சமயத்தின் துணைகொண்டே வீழ்த்திப் பணிய வைக்க வேண்டும். ஆமாம், இளவரசி! சமண சமயத்தைச் சார்ந்து நிற்கும் தாங்கள் சைவ சமயத்தைத் தழுவி விட்டால், தங்களுடைய காதல் திருமணத்தைத் தடுத்து நிறுத்த இந்த உலகமே முயன்றாலும் முடியாது. அது மட்டுமல்ல; தங்கள் இதயக் கோமான் பரமேசுவர வர்மருக்கும், அவரது மாபெரும் பல்லவ சாம்ராஜ்யத்துக்கும் அதனால் பேருதவி புரிந்தவராகவும் ஆவீர்கள்.''

இதைக் கேட்டு மூச்சு முட்டித் திணறிப் போன உத்தமசீலி தன்னை உடனே சமாளித்துக் கொண்டு அவளைப் பரிதாபமாகப் பார்த்து அவலப் புன்னகை பூத்தாள். ''சோழ குமாரி! என்மீது நீ வைத்திருக்கும் மாசற்ற அன்பினாலேயே இப்படிப்பட்ட ஒரு யோசனையைச் சொல்லத் துணிந்தாய் என்று நான் மனப்பூர்வமாக நம்பி, அதற்காக என் இதயம் கனிந்த நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன். ஆனால், என் உயிரே போவதானாலும் இந்த யோசனையை மட்டும் ஒருபோதும் ஏற்க மாட்டேன். சைவ சமயத்தை விட சமண சமயமே உயர்ந்தது என்ற வெறித்தனமான நம்பிக்கையில் இவ்வாறு நான் சொல்வதாக நினைக்காதே. சமண சமயத்தை எந்த அளவுக்கு நேசித்து மதிக்கிறேனோ, அதே அளவுக்குச் சைவ சமயத்தையும் நேசிக்கிறேன், மதிக்கிறேன். உலகிலுள்ள மற்ற எல்லா சமயங்களையும் இவ்வாறே மதித்துப் போற்றிக் கௌரவிக்கிறேன். ஆனால் புற வாழ்க்கையின் அநித்தியமான ஓர் அற்ப உணர்ச்சி ஈடேற்றத்துக்காக, அக வாழ்க்கையின் நித்திய பேரின்பப் பேற்றுக்குரிய ஓர் ஊன்றுகோலை மாற்றிக் கொள்ள முனைவது போன்ற அருவருக்கத் தக்க செயலை ஒருகாலும் செய்யத் துணியமாட்டேன். அப்படியே நான் சமயம் விட்டுச் சமயம் மாறத் துணிந்தாலும் என்னுடைய நோக்கம் நிச்சயம் வெற்றி பெறாதென்பது எனக்கு நன்றாகத் தெரியும். யாருக்காக நான் அந்தக் காரியத்தைச் செய்கிறேனோ, அவரே அதை ஏற்க மாட்டார். ஏற்காததோடுமட்டுமல்ல; என்னையும் என்மீது கொண்ட காதலையும் அவர் இழிவு மிக்கப் புழுவென மதித்து அக்கணமே உதறித் தள்ளியும் விடுவார். பல்லவ மாமன்னர் பரமேசுவர வர்மரைப் பற்றி நான் நன்கு அறிவேன். இந்த நாட்டுக்கு வந்தபோது ஓரளவு சமய வெறி கொண்டவளாயிருந்த என்னுள் சமயப் பொறையை ஊட்டிச் சமயம் என்றால் என்ன என்பதைச் சரியாக எனக்கு உணர்த்தியவரே அவர்தான். என்னை அவர் அழகுக்காகவோ, அறிவுக்காகவோ, அல்லது அவருடைய நாட்டின் விடுதலைக்கு நான் செய்த உதவிக்காகவோ காதலிக்கவில்லை; என்னிடமுள்ள ஒழுக்கக் கட்டுப்பாட்டுக்காகவும், சமய நெறிகளில் எனக்குள்ள ஆழ்ந்த பற்றுக்காகவுமே என்னை அவர் காத

வித்தார், இப்போதும் காதலிக்கிறார். இத்தகைய உயரிய நம்பிக்கை கொண்ட அந்த உத்தமக் கோமானுக்கு நான் ஒருபோதும் துரோகம் செய்ய மாட்டேன். என்மீது அவர் வைத்திருக்கும் மலையொத்த மதிப்பிலிருந்து என்னை எள்ளத்தனையும் குறைத்துக் கொள்ளவே மாட்டேன்.''

பள்ளத்தாக்கில் நின்று மலையின் சிகர விளிம்பைப் பார்ப்பதுபோல் அவளைப் பார்த்துக் கொண்டிருந்த இளங்கோப்பிச்சியின் உடல் வேர்த்துத் தெப்பமாக நனைந்து விட்டது.

சற்று நேர அமைதிக்குப் பின் மெல்லத் தலைநிமிர்ந்த உத்தமசீலி கம்மிய குரலில், ''இளங்கோப்பிச்சி! எங்கள் திருமணத்துக்கு எதிராக நாட்டில் ஏற்பட்டிருக்கும் கொந்தளிப்பு நிலை பற்றிப் பல்லவ மன்னர் என்ன நினைக்கிறார்? அது குறித்து நீ ஏதேனும் அறிவாயா?'' என்று கேட்டாள்.

''எனக்கு மட்டுமல்ல, இந்த நாட்டில் உள்ள வேறு யாருக்குமே அதுபற்றி



ஒன்றும் தெரியாது என்றே நினைக்கிறேன், இளவரசி!'' என்று முணுமுணுத்தாள் இளங்கோப்பிச்சி.

இதைக் கேட்டுத் திடீரென்று சிரித்த உத்தமசீலி, ''எனக்குத் தெரியும், சோழ குமாரி! எனக்கு அதுபற்றி நன்றாகத் தெரியும்!'' என்று தன்னை மீறிய மகிழ்ச்சியுடன் குதித்துக் கூறிக் கொண்டே தன் அறைக்கு ஓடியவள், அங்கே ஒரு பேழையில் பத்திரமாகச் சுருட்டி வைத்திருந்த —வாடிக் கருகிய—ஆதொண்டை மலர் மாலை ஒன்றை அவசரமாக எடுத்துக் கழுத்தில் அணிந்து கொண்டு ஓர் அழகுக் கோணத்தில் ஒயிலாக நின்று மீண்டும் கலகலவெனச் சிரித்தாள்.

அன்றொரு நாள் இரவு பொன்வள நல்லூர்ச் சிற்றாற்றங்கரை மணற் சரிவில் அவளும் பரமேசுவரவர்மனும் அமர்ந்து கந்தர்வ ரசமயமான காதல் உணர்வில் கட்டுண்டு கிடந்தபோது, அவன் தன் மார்பில் புரள்விட்டுக்கொண்டிருந்த ஆதொண்டை மலர் மாலையைக் கழற்றி அவளது சங்கு நிறக் கழுத்தில் அணிவித்தானே, அந்த மாலையைத்தான் அவள் அக்கறையுடன் பத்திரமாக வைத்திருந்து இப்போது எடுத்துச் சூடிக்கொண்டு இளங்கோப்பிச்சியிடம் ஏதோ சொல்ல முற்பட்ட சமயம், வெளியே குதிரையொன்று ஓடி வந்த ஒலி கேட்டுத் திடுக்கிட்டவளாய்ச் சாளரத்துப் பக்கம் எட்டிப் பார்த்தாள்.

சந்திரலேகைச் சிற்றரசரான பெரும்பிடுகு முத்தரையர் புரவியை விட்டு இறங்கி, அந்த இல்லத்தை நோக்கித் தளர் நடையிட்டு வந்து கொண்டிருந்தார்!

''ஆந்திர இளவரசியாருக்கு என் அன்பு கலந்த வணக்கம் உரித்தாகும்.''

இதற்கு முன் அறிமுகமில்லாத புதிய மனிதர் ஒருவரைப் பார்த்ததால் ஏற்பட்ட பரபரப்புடன் முன்றிலுக்கு வந்த உத்தமசீலி, அங்கே சோர்வும் களைப்புமாக நின்றுகொண்டிருந்த முத்தரையரை ஏறிட்டு நோக்கினாள்.

இதுவரை தாம் கற்பனை செய்து வைத்திருந்த அழகு வடிவத்தைக் காட்டிலும் பன்மடங்கு பேரழகு வாய்ந்தவளாய், பூசனைக்குரிய ஒரு தெய்வச் சிலைபோல் விளங்கிய அவளை வியப்புடன் பார்த்துக்கொண்டிருந்த முத்தரையர் குழைவுப் புன்னகையுடன் நிமிர்ந்து, ''என் பெயர் பெரும்பிடுகு முத்தரையன். சந்திரலேகைக் குறுநில மன்னன்'' என்று தம்மை அறிமுகப் படுத்திக்கொண்டு மேலும் சொன்னார்: ''பல்லவ நாட்டின் விடுதலைக்குப் பேருதவி புரிந்த உத்தமசீலியாரை இன்று முதன் முதலாகச் சந்திக்க வாய்ப்புக் கிடைத்தது பற்றிப் பெரிதும் மகிழ்ச்சியடைகிறேன்.''

''வணக்கம்; ஐயா!'' என்று பணிவுடன் கரம் கூப்பிய உத்தமசீலி, 'இவர் பல்லவ மன்னரோடு காஞ்சியில் இருப்பதாக அல்லவா கேள்விப்பட்டேன்? இங்கே ஏன் இப்போது வந்திருக்கிறார்?' என்று எண்ணிக் குழம்பலானாள்.

அந்த இல்லத்தினுள் பிரவேசிக்கும் போதே அங்கு சோழ இளவரசி இளங்கோப்பிச்சி இருப்பதைக் கவனித்துவிட்ட முத்தரையர், தாம் வந்த விஷயமாகப் பேச்சை எடுக்கலாமா வேண்டாமா என்று தயக்கப்படுகிறவர்போல் சிறிது நேரம் பேசாதிருந்தார். இளங்கோப்பிச்சியோ அவரை நேரில் வந்து பார்க்கத் தைரியமில்லாதவளாய்த் தன் அறையிலேயே ஒடுங்கி மறைந்து நின்றுகொண்டிருந்தாள்.

''ஆந்திர இளவரசியாரிடம் ஒரு முக்கியமான விஷயம் பற்றிப் பேச வந்திருக்கிறேன்...'' என்று கரகரத்த குரலில் கூறிய முத்தரையர் தம் பார்வையை உட்பக்கம் செலுத்தியவாறு, ''சோழ இளவரசியாரும் இங்குதான் இருக்கிறாரா?....'' என்று இழுத்தாற்போல் வினவினார்.

அவரது தயக்கத்தின் காரணத்தை உடனே புரிந்துகொண்ட உத்தமசீலி, ''ஆம், ஐயா! இளங்கோப்பிச்சி என்னுடன்தான் தங்கியிருக்கிறாள். அவள் எனக்குத் துணையாக மட்டுமல்ல, என் நம்பிக்கைக்கு உரிய சகோதரியாகவும் இருந்து வருகிறாள்'' என்றாள் இள நகையுடன்.

அவளது புத்திக்கூர்மையை அறிந்து உள்ளூற வியப்படைந்த முத்தரையர், ''மெத்த மகிழ்ச்சி, அம்மணி!'' என்று கூறிச் சிறுபொழுது பேசாதிருந்துவிட்டுப் பிறகு துயரம் செறிந்த குரலில் மெல்லப் பேச்சை ஆரம்பித்தார்: ''ஆந்திர இளவரசியார் இந்நாட்டின் இன்றைய நிலவரங்களை ஓரளவாவது அறிந்திருப்பார் என்று நினைக்கிறேன்...''

உத்தமசீலியின் உடலும் உள்ளமும் நிலைகொள்ளாமல் பதறித் துடித்தன. ஏதோ ஒரு பேரிடி தன்மீது விழப் போவதை உணர்ந்து அதைப் பாபப் பிராந்தியுடன் எதிர்பார்ப்பவள்போல் அவரை மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''இளவரசியார் மௌனம் சாதிப்பதிலிருந்து அவருக்கு எல்லா விவரங்களும் தெரிந்திருக்கிறதென்றே தோன்றுகிறது. ஆகவே, அவற்றை மீண்டும் சொல்லி அவரது மனத்தைப் புண்படுத்த நான் விரும்பவில்லை. ஆனால் அவருக்குத் தெரி

# ஜலதோஷம், ஜுரம் போன்ற உணர்ச்சி இவைகளிலிருந்து

ஜலதோஷம் ஜுரம் ஆகியவைகளின் முதல் அறிகுறி தென்பட்டவுடனேயே 'ஆஸ்ப்ரோ'வை உட்கொள்ளுங்கள். தலைவலி, பல்வலி, முதுகுவலி, மாதவிடாய் நோவுகள், தொண்டைப்புண், நரம்புவலி, மற்றும் இதர வலிகளும் நோவுகளுங்கூட ஆஸ்ப்ரோவின் அபாயமற்ற செயல்திறனால் குணமாகின்றன.

'ஆஸ்ப்ரோ'விலுள்ள தீவிர சக்துப்பொருள் மற்றெதையும்விட அபாயமில்லாமல் வலியைப் போக்கக்கூடியது என மருத்துவக்கலை நிரூபித்துள்ளது.

ஒரு தூய மருந்து என்பதால் உலகெங்குமுள்ள லக்ஷக் கணக்கான நோயாளிகளுக்கு அதிக நிவாரணமளிக்க வைத்தியர்களால் தினந்தோறும் உபயோகிக்கப்படுகிறது. 'ஆஸ்ப்ரோ' எந்தவித அபாயகரமான மருந்துகளும் கலவாதது. ஆகவே நீண்டகாலம் அபாயமின்றி உபயோகிக்கக்கூடியது. 'ஆஸ்ப்ரோ' லக்ஷக்கணக்கானவர்கள் உபயோகிக்கும் குடும்ப மருந்து—உலகிலேயே அதிகம் விற்பனையாகும் வலிநிவாரணி. வை எப்பொழுதும் கைவசம் வைத்திருங்கள்.

## துரிதமாகவும் பூர்ணமாகவும் நிவாரணம் பெற

# 'ஆஸ்ப்ரோ'




'ஆஸ்ப்ரோ' வேலைசெய்யும் மூன்று விதங்கள்







## 'ஆஸ்ப்ரோ'
## எவ்வகையிலும்
## அபாயமற்றது — சிறந்தது

ஒரு நிக்கோலஸ் தயாரிப்பு

A.G. 169. TAM

யாத — அவரால் தெரிந்துகொள்ள முடியாத—ஒரே ஒரு செதியை மட்டும் சொல்லியாக வேண்டும். அதைச் சொல்லிவிட்டுப் போகவே இங்கு வந்திருக்கிறேன்.''

முத்தரையரின் இந்தப் பீடிகையைக் கேட்டு வெடவெடவென்று நடுங்கிய உத்தமசீலி உதட்டை இறுகக் கடித்துக் கொண்டு பாதங்களைத் தரையில் ஊன்ற விட்டு நின்றாள்.

## அத்தியாயம் முப்பத்தெட்டு

# முத்தரையரின் யோசனை

கண்களை மூடிச் சற்றுநேரம் விறைத்து நின்று கொண்டிருந்த முத்தரையர் சட்டென்று நிமிர்ந்து, ''ஆமாம், இளவரசி! பழம்பெருமை வாய்ந்த பல்லவ நாடு கடந்த சில ஆண்டுகளாக அந்நியரின் ஆதிக்கத்தில் அடிமைப்பட்டுக் கிடந்தது. ஆனால் இப்போதோ அது நாயகனை இழந்த நாயகியாகக் கைம்மைக்கோலம் பூண்டு நிற்கப் போகிறது. அதற்கான நேரமும் நெருங்கி வந்துகொண்டே யிருக்கிறது'' என்றார் கரகரத்த குரலில்.

மின்னலால் தாக்குண்டவள் போல் துடித்துப் பதறிய உத்தமசீலி, ''ஐயா! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று தாக்குதலைக் கேட்டாள்.

''உண்மைதான், இளவரசி! பல்லவப் பேரரசர் பரமேசுவரவர்மர் தம் மணி முடியைத் துறக்க முடிவு செய்து விட்டார்!''

''என்ன? பல்லவ சாம்ராஜ்யத்தின் அரசு கட்டிலைத் துறக்கப் போகிறாரா?''

''ஆம், அம்மணி!''

''ஏன் இந்தப் பயங்கர முடிவு?''

''உள்ளார்ந்த காரணம் ஒன்று; ஆனால் அதற்கு அவர் வெளிப்படையாகச் சொல்லும் காரணமோ விசித்திரமானது!''

''அதை நான் அறியலாமா, ஐயா?''

''அவசியம் நீங்கள் அறிந்தே ஆக வேண்டும், இளவரசி! அதாவது, அவருக்கு விரோதமாக இளவரசர் கோவிந்த வர்மரும், பழையாறைச் சோழரும் சேர்ந்து நாட்டில் குழப்பத்தை உண்டாக்கி வருவதற்குக் காரணம் அவருடைய திருமணத்தைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்பதற்காக அல்ல என்றும், பல்லவ அரச பீடத்துக்கு ஆசைப்பட்டே அவர்கள் அவ்வாறு குறுக்கு வழிப் பிரசாரத்தில் இறங்கியிருக்கிறார்கள் என்றும், அதனால் அவர்களுடைய ஆசைக்குப் பங்கம் விளைவிக்காமல், நாட்டிலே அமைதியும் நல்வாழ்வும் நிலவவேண்டும் என்பதற்காகத் தமது மணி முடியைத் துறந்து இராஜாதிகாரத்தை இளவரசர் கோவிந்த வர்மரிடம் ஒப்படைத்துவிட்டுத் தாம் வெளியேறி விடுவதென்றும் முடிவு செய்து விட்டதாகச் சொல்கிறார் பரமேசுவரவர்மர்!''

''அப்படியானால்...?''

''அவருடைய இந்த முடிவின் உள் நோக்கம் வேறு அம்மணி! சைவ சமயத்தைச் சார்ந்த அவர், சமணரான தங்களை மணக்க அவரது அன்னையே அநுமதி வழங்க மறுத்து விட்டார். அதற்குக் காரணம் அவர் ஒரு மாபெரும் தேசத்து மன்னராக இருப்பதால்தான் என்றும் சொல்லிவிட்டார். இந்நிலையில் பல்லவ சாம்ராஜ்யத்தின் மணிமுடியை விடத் தங்களையும், தங்கள் மீது கொண்ட காதலையுமே உயர்வாகக் கருதிப் போற்றிவரும் அவர் தம் இராஜ கிரீடத்தைத் துச்சமெனத் தூக்கி எறிந்துவிட்டுத் தங்களின் திருக்கரம் பற்றி இந்நாட்டை விட்டே வெளியேறி விடுவதென்று தீர்மானித்து விட்டார். இதை அவர் வாய் விட்டுச் சொல்லவில்லையே தவிர, அவரின் அந்தத் திடீர் முடிவுக்கு இதுதான் உண்மையான காரணம்.''

அளவுக்கு மீறிய பயத்தாலும், தாங்கொணாத் துயரத்தாலும் அதிர்ந்து நடுங்கிக்கொண்டு நின்றிருந்த உத்தமசீலி, முத்தரையரின் இந்தப் பேச்சைக் கேட்டதும், ஏதோ சொர்க்கசுகானந்தத் தேன் பொழிலில் குதித்து நீந்துபவள் போல் மகிழ்ச்சிப் பரவசத்துடன் முகம் சிவக்க அழகுப் புன்னகை பூத்தாள். தனக்காகத் தன் காதலன் ஒரு பெரிய சாம்ராஜ்யத்தையே துறக்கத் தயாராகி விட்டான் என்பதைக் கேள்விப்பட்டே அவள் அப்படிக் குதூகலக் குளிர்ச்சியடைந்தாள்.

அவளுடைய மன நிலையைப் புரிந்து கொண்ட முத்தரையர் திடுக்குற்றுத் திரும்பியவராய் ஓரடி முன் வந்து படபடப்புடன் சொன்னார்: ''எனவேதான் இளவரசி, நான் முதலில் சொன்னது போல் இந்தப் புகழ் மண்டிய பல்லவ நாடு இன்னும் சில தினங்களிலே வைதவ்யக் கோலம் பூண்ட விதவையாக நின்று தவிக்கப் போகிறது என்கிறேன். பரமேசுவரவர்மர் எதைப் பற்றியும் எளிதில் ஒரு முடிவுக்கு வர

> இடியையும் மின்னலையும் பொருட்படுத்தாது சாதகப்பட்சி ஆகாயத்தை அண்ணாந்து நோக்கி மேகத்திலிருந்து நேராக இழியும் நீரைத்தான் பருகும். அதேபோல நீயும் எத்தனை இடையூறுகள் ஏற்பட்டாலும் உனது இலட்சியமொன்றிலேயே ஈடுபடுவாயாக!
>
> —ஸ்வாமி விவேகானந்தர்

மாட்டார். ஏதேனும் முடிவுக்கு வந்துவிட்டாலோ அதை எந்தக் காரணத்தைக் கொண்டும் மாற்றிக் கொள்ள மாட்டார். இதுதான் அவருடைய இயற்கை குணம். இப்படிப்பட்டவர் தம் இராஜாதிகாரப் பொறுப்பை இளவரசர் கோவிந்தவர்மரிடம் ஒப்படைத்துப் போய்விட்டாராஞல் இந்நாட்டின் நிலைமை என்ன ஆகும்? இராஜரீக அநுபவமற்ற — முன் கோபமும், அவசர புத்தியும், உணர்ச்சிகளுக்குச் சடுதியில் இரையாகக் கூடிய பலவீனமும் கொண்ட — இளைஞரான கோவிந்தவர்மரால் இம் மாபெரும் தேசத்தைக் கட்டியாள முடியுமா? அவர் ஆள முன்வந்தாலும் மக்கள் அவரை மன்னராக ஏற்றுக் கொள்வார்களா? இன்று அவரால் நாட்டிலே பரப்பப்பட்டிருக்கும் சமயத் துவேஷக் கனல் அவரையே சுட்டுச் சாம்பலாக்கிவிடுமே! இந்த நிலையைப் பயன்படுத்திக்கொண்டு மீண்டும் தமது ஆதிக்கக் கொடியைப் பறக்கவிடச் சளுக்கியர்கள் படையெடுத்துப் பாய்ந்து வந்துவிடுவார்களே! இதற்காகவா இந்நாட்டின் விடுதலைக்காக நாம் பாடுபட்டோம்? ஆந்திர இளவரசியாரின் அன்புக்குப் பாத்திரமான இந்த அழகிய பல்லவநாடு அத்தகைய பரிதாப நிலைக்கு உட்பட்டுச் சீரழிய விரும்புவாராஎன்றுதான்கேட்கிறேன்!''

''இவ்வளவு பெரிய கேள்விக்குச் சிறிய பெண்ணுை நான் என்ன பதில் சொல்ல முடியும், ஐயா?''

''இந்த மாபெரும் கேள்விக்கு உரிய மாபெரும் பதில் உங்கள் ஒருவரின் கையில்தான் இருக்கிறது, அம்மணி!''

உத்தமசீலி விழித்துக்கொண்டாள்.

''இளவரசியார் ஏன் மௌனமாக இருக்கிஞர்? பல்லவ நாட்டைப் பற்றித் தமக்கு அக்கறை இல்லை என்பதுதான் அவரது பதிலா?'' என்று அடைத்த குரலில் வினவிஞர் முத்தரையர்.

உத்தமசீலி பதிலேதும் சொல்லாமல் மௌனமாக நின்ருள்.

''நிச்சயமாக நான் நம்புகிறேன், ஆந்திர இளவரசியார் அப்படிச் சொல்லவே மாட்டார் என்று!''

இப்போதும் அவள் ஏதும் கூருது சிலை போல் இருந்தாள்.

''உண்மையில் உத்தமசீலியார் அதை விரும்பவில்லை யென்ருல், அவர் செய்யக்கூடிய ஒரு பேருபகாரத்துக்கு எனது எளிய யோசனை ஒன்றைச் சொல்வேன்; கேட்பாரா?''

எவ்வித உணர்ச்சியுமின்றி அவரை ஏறிட்டு நோக்கிஞள் உத்தமசீலி.

''இந்த இக்கட்டான நிலைமையைப் போக்க ஆந்திர இளவரசியார் சைவ சமயத்தைத் தழுவ வேண்டும் என்று நான் யோசனை சொல்லப் போவதாக நினைக்க வேண்டாம்! அவ்வாறு ஒரு போதும் சொல்ல மாட்டேன். ஏனென்ருல் நானும் சமண சமயத்தைச் சார்ந்தவன். நான் ஓர் உண்மையான சமணஞைதால் சைவ சமயத்தை உளமார நேசிக்கிறேன். எனவே அத்தகைய தவருன யோசனை சொல்லிச் சைவ சமயத்தைக் குறைவுபடுத்த மாட்டேன்.''

அவள் இப்போது அவரைக் கூர்ந்து நோக்கிஞள்.

''இளவரசி! நான் உங்களுக்குச் சொல்லக் கூடிய ஒரே யோசனை இது தான்: பல்லவ மன்னர் பரமேசுவர வர்மரிடம் சொல்லிக் கொள்ளாமல் இரகசியமாகத் தாங்கள் இந்நாட்டிலிருந்து உடனே பயணமாகித் தங்களது சொந்த ஆந்திர நாட்டுக்குப் போய் அங்கேயே சிறிது காலம் தங்கியிருக்க வேண்டும். அப்படிச் செய்தால் இங்கு ஏற்பட்டுள்ள கொந்தளிப்பு ஒருவாறு அடங்கிவிடும். பிறகு உண்மையைப் பரமேசுவர வர்மருக்குத் தெரிவித்து, அவரை முடி துறக்க விடாமல் தடுத்து, அதன் பின் மக்களின் மன நிலையை மெல்ல மெல்ல மாற்றியமைத்துக் கொண்டு அவர்களது பரிபூரண சம்மதத்தோடு தங்களை வரவழைத்துத் திருமணத்தை வெற்றிகரமாக நடத்தி முடித்துவிடலாம். இந்தத் திட்டத்தை நானே முன்னின்று நடத்திவைப்பேன்.''

நீண்ட நேர அமைதிக்குப் பின் ஓர் இளநகையுடன் தலைநிமிர்ந்த உத்தமசீலி மிகமிக நிதானமாகச் சொன்ஞள்: ''ஐயா! தங்களின் மேலான யோசனையை நான் ஏற்பதாகவோ அல்லது ஏற்க மறுப்பதாகவோ இப்போதைக்கு என்ஞல் எதுவும் சொல்ல முடியாது. ஆஞல் ஒன்றை மட்டும் உறுதியாகச் சொல்வேன்: பல்லவ மாமன்னர் என் பொருட்டுத் தம் மணி முடியைத் துறப்பதற்கு நான் எவ்வகையிலும் காரணமாயிருக்க மாட்டேன். இந்த நம்பிக்கையுடன் தாங்கள் சென்று வரலாம்.''

(தொடரும்)

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon




இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

L. 40-140 T(